உ

ஸ்ரீ செல்வகணபதி துணை ஸ்ரீ குடவரசி துணை

சிவமயம்



நாள் :- 11-12-2013 புதன்கிழமை

திருமுறை செல்வர் திருக்கோலக்கா

சிவஸ்ரீ N.ஞானசம்பந்த சிவாச்சாரியார்

மாதுஸ்ரீ G.வசந்தலக்ஷ்மி தம்பதிகளின்

# பீமரதசாந்திவிழா மலர்




தொகுப்பு ஆசிரியர்:-

சிவாகம ஞானசாகரம், சாக்த ரத்னம்,

சிவஸ்ரீ கயிலை மாமணி திருக்கோலக்கா

N.இராமநாத சிவாச்சாரியார்,

| பொருளடக்கம் | | பக்கம் |
|---|---|---|

உ

ஸ்ரீ செல்வகணபதி துணை.

# சிவாச்சார்ய பஞ்சரத்னம்

திருக்கோலக்கா விகாஸித ரத்னம்
நடேச சிவாசார்ய புத்ர ரத்னம்
மீனாக்ஷியம்பா பிரிய புத்ர ரத்னம்
ஞானசம்பந்த சிவாச்சாரிய ரத்னம்

ராமநாத பிரியபிராத்ரு ரத்னம்
விஸ்வநாத பிரியபிராத்ரு ரத்னம்
முத்துசுவாமி பிரிய பிராத்ரு ரத்னம்
ஞானசம்பந்த சிவாச்சாரிய ரத்னம்.

ஸ்ரீகடேஸ்வரி குலதேவதா ரத்னம்
தாளபுரீசுவர பூஜித ஸுரத்னம்
ஸ்ரீத்வனி ப்ரதாம்பாபூஜித ஸுரத்னம்
ஞானசம்பந்த சிவாச்சாரிய ரத்னம்

வஸந்தலக்ஷ்மி பிரிய பத்ரு ரத்னம்
ஸ்ரீகார்த்கேய பிரிய பித்ருரத்னம்
திருபுரசுந்தரி ஸ்வச்ரு ஸுரத்னம்
ஞானசம்பந்த சிவாச்சாரிய ரத்னம்

ஸஹானாதேவி பிரிய வளத்ரி ரத்னம்
ஸ்ரீசிவசூரியமூர்த்தி வளத்ர ரத்னம்
பீமரதசாந்தி வைபவ ரத்னம்
ஞானசம்பந்த சிவாச்சாரிய ரத்னம்



உ
ஸ்ரீ சிவமயம்
ஸ்ரீ செல்வ கணபதி துணை.

# கணபதி அவதாரமும் தத்துவமும்



சிவதநயவரிஷ்டம் ஸர்வ கல்யாண மூர்திம்
பரசு கமலஹஸ்தம் சோபிதம் மோதகேன
அருணகுஸுமமாலாவ்யாள லம்போதரம்தம்
மமஹ்ருதய நிவாஸம் ஸ்ரீகணேசம் நமாமி.



உலகத்தில் உள்ள ஸகலஸ்தாவரஜங்கம எல்லா உயிரினங்களையும் தன்னகத்தே ஒடுக்கி கொள்வதுதான் மஹாபிரளயமாகும். உயிர்கள் அனைத்தையும் படைத்தவன் பிரும்மன். எனவே அனைத்து உயிர்களும் பிரும்மனிடம் ஒடுங்க பிரும்மனோ விஷ்ணுவின் உந்திகமலத்தில் தோன்றியதால் விஷ்ணுவிடம் ஒடுங்க விஷ்ணுவோ தேவியினுடைய பத்துவிரல்களில் தோன்றியதால் (கராங்குளி நகோத் பன்ன நாராயணதாசாக்ருதி) விஷ்ணுவானவர். தேவியினிடத்தில் ஒடுங்க தேவியோ மாதொருபாகனாகிய இறைவன் சிவபெருமானிடத்தில் ஒடுங்கினாள்.

சிவபெருமானோ பிறப்பு இல்லாத ஆதியும் அந்தமுமில்லாத அருட்பெருஞ்ஜோதியாக உள்ளவர். அருவமும் உருவமாகி அநாதியாய் பலவாய் ஒன்றாய் பிரும்மமாய்நின்ற ஜோதிபிழம்பதோர்மேனியாக கருணைநிறைந்த ஐந்து முகங்களும் கரங்கள் பத்தும் கொண்ட சதாசிவமூர்த்தியாக ஏகநாயகனாக திகழ்ந்தார். அம்மூர்த்தி ஒருசமயம் தன்கையில் உள்ள உடுக்கையை எடுத்து ஒலிக்க அதிலிருந்து ஓ என்ற ஓலி உண்டாக உடன் பிந்து வாக்கியம்சேர்ந்து ஓம் என்ற பிரணவஓலி உண்டாயிற்று. எல்லா கலைகளுக்கும் ஆதியாக ஓம் என்பது முதலாவதாக தோன்றியதால்தான் நாதபிந்து கலாதி நமோ நம என்று திருப்புகழ் கூறுகிறது.

உலகத்தை மீண்டும் படைக்க விரும்பிய இறைவன் முதல் ஒலியாக தோன்றிய ஓங்காரமெனும் ப்ரணவத்திலிருந்து ஒர் உருவை படைத்தார். அதுதான் ஓங்கார கணபதி என்ற விநாயகபெருமான் ஆகும். அந்த ஓம் என்னும் ஒலிதான் வேதங்கள் முதல் அனைத்திற்கும் முதலாவதாக அமைந்துள்ளது. ஓம் என்னும் ஒலி இல்லாத மந்திரம் உயிரில்லாத மந்திரம் எனவும் வழங்கலாயிற்று.

ஓங்காரத்தின் வடிவாக தோன்றிய விநாயகபெருமானை எல்லாகடவுளுக்கும் முதன்மையாக வழிபட்டு வருகின்றோம். மனிதனுக்கு அடிப்படைதேவைகள் மூன்று அவை முறையே கல்வி, செல்வம், ஆற்றல், என்பதாம். இந்த மூன்றையும் அருள்வதற்கு விநாயக பெருமான் மூன்று சக்திகளை இணைத்துகொண்டு அருள்பாலித்து வருகிறார். கல்வியைத்தர புத்தி என்ற சக்தியையும் செல்வத்தை தர ஸித்தி என்று சக்தியையும் ஆற்றலைதர வல்லபை என்ற சக்தியையும் இணைத்து அருள்பாலிக்கிறார்.

நமக்கு ஏற்படும் எல்லா விதமான தடைகளையும் நீக்கி எல்லாம் நிறைவான மகிழ்ச்சியைத் தர நினைத்த காரியம் கைகூடிவர விநாயகபெருமானுக்கு மோதகம் ( கொழுக்கட்டை) நிவேத்யம் செய்து ஹோமம் செய்தால் மிகுந்த பலனைத்தரும் மோதகத்தில் உள்ளே உள்ள பூரணம்போல நம் எண்ணங்கள் எல்லாம் பூரணமாக நிறைவேறும். என்பதை கணபதி உபநிஷத் (யோமோதக ஸஹஸ்ரேனயஜதிஸவாஞ்சித பலமவாப்னோதி) ஆயிரம் கொழுகட்டைகளை ஹோமம் செய்து நிவேதனம் செய்தால். விரும்பிய பலன் அனைத்தும் கிடைக்க செய்யும் என்று கூறுகிறது. (யோதூர்வாங்குரைர்யஜதி ஸவைச்ரவனோபமோபவதி அறுகம்புல்லினால் பூஜை ஹோமம் செய்தால் மிகுந்த செல்வம் கிடைக்க செய்யும் என்று கணபதி உபநிஷத் கூறுகிறது. (யோலாஜைர்யஜதி ஸயசோவான்பவதி ஸமேதாவான் பவதி) நல்ல வெண்மையானபொறியினால் ஹோமம் செய்தால் நல்லபுகழும் நல்ல அறிவும் மேதாவியாகவும், திகழச்செய்யும் என்று கூறுகிறது. (ஸஹஸ்ரா வர்த்தனாத்யம்யம் காமமதீதே தம்தம் அநேந ஸாதயேது ) நாம்விரும்பும் காமனைகள் (எண்ணங்கள்) எல்லாம் கைகூடிவர வேண்டுமானால் கணபதி மூல மந்திரத்தை ஆயிரம் ஆவர்த்தி ஜபம் செய்து வழிபட்டால் நினைத்த காரியம் உடனே கைகூடிவருமென கணபதி உபநிஷத் கூறுகிறது. கணபதி வழிபாடு கைமேல் பலன் தரும் என்பது ஆன்றோர் வாக்கு.

( கலௌ.சண்டி விநாயகௌ ஷிப்ரப்ரஸாதகௌ) கலியுகத்தில் சீக்ரமாகவும் சுலபமாகவும் மிகுதியாகவும் பலன்தரக்கூடியது. சண்டி ஹோமம் கணபதி ஹோம வழிபாடுதான் என்று சாஸ்திரங் கூறுகின்றது.

கணபதியை பூஜை வழிபாடு செய்வதினால் மற்ற எல்லா தெய்வங்களையும் பூஜை வழிபாடுசெய்த பலன் கிடைக்கசெய்யும் என்பதை அதர்வண வேதம் தெளிவாக கூறுகிறது. (த்வம் பிரும்மாஸ்த்வம்)

விஷ்ணுஸ்த்வம் ருத்ரஸ்த்வம் இந்திரஸ்த்வம் அக்னிஸ்த்வம் வாயுஸ்த்வம் சூரியஸ்த்வம் சந்திரமாஸ்த்வம் பிரும்ம பூர்ப்புவஸுவ ரோம்) என்று கூறுகின்றது.

கணபதி எல்லா தெய்வமாக இருக்கிறார். என்று கூறுவதை அறியகூடியதாகவுள்ளது. ஸ்ரீகணபதி மந்திர ஸித்தியாக சூரியனுடைய முன்னிலையில் மஹாநதிக்கரையில் விக்ரஹங்களுடைய முன்னிலையில் கணபதி மந்திரத்தை ஜபம் செய்தால் மந்திரஸித்தி ஏற்படும் என்பதை (ஸுர்யக்ரஹே.மஹாநத்யாம் பிரதிமாஸந்நிதௌவாஜப்த்வா ஸஸித்தமந்திரோ பவதி) என்று அதர்வண வேதத்தில் உள்ள கணபதி உபநிஷத் கூறுகிறது.

விநாயகனே வெவ்வினையை வேறருக்கவல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்
விநாயகனே விண்ணிற்கும் மண்ணிற்கும்
நாதனுமாம் தன்மையினால் கண்ணிற்பணிமின் கனிந்து.

கணபதி என்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி என்றிடக் காலனும் கைதொழும்
கணபதி என்றிட கருமமும் ஆதலால்
கணபதி என்றிட கவலைகள் தீருமே.

**விநாயகர் வரலாறு சம்பூர்ணம்**



உ
ஸ்ரீ சிவமயம்
ஸ்ரீ செல்வ கணபதி துணை.

# ஆறுமுகசிவபெருமான் வரலாறு



தக்ஷன் ஒரு யாகம் செய்ய தேவர்கள் முனிவர்கள் யாவரையும் அழைத்திருந்தான். தக்ஷன் யாகத்தை துவங்க அனுமதி (அனுக்ஞை) கேட்டான். அப்பொழுது அங்கு வந்திருந்தவர்களில் ததீசி முனிவர்யாகம் துவங்குவதற்கு யாகேஸ்வரணான சிவபெருமான் வரவில்லையே அவர் வராது யாகத்தை எப்படி துவங்குவது என்று கேட்டார். தக்ஷன் அதற்கு சிவனை அழைக்கவில்லை சிவனில்லாமல் இந்த யாகத்தை நடத்த உத்தேசம் என்றான். அதனைக் கேட்ட ததீசி முனிவர் தேவர்களையும் முனிவர்களையும் பார்த்து இங்கு நடக்க இருப்பது சிவாபசாரமானயாகம் என்பதை அறிந்துதான் கலந்துக்கொள்ள வந்திருக்கிறீர்களா? என்று கேட்டு இந்த யாகத்தின் பலனை விரைவில் அனுபவிப்பீர்கள் என்று கூறிவிட்டு புறப்பட்டு சென்றுவிட்டார்.

பிறகு பராசக்தியான தாக்ஷாயிணி அங்கு வந்தாள் தன் தந்தையான தக்ஷனிடம். இறைவன் என்ற முறையில் அழைக்காவிட்டாலும் மருமகன் என்ற முறையிலாவது அழைக்கவேண்டாமா? உன் மனதை மாற்றிக்கொண்டு உடனே சென்று சிவபெருமானை அழைத்து யாகத்தை சிறப்பாக நடத்து என்று கூறினாள். அதனைக்கேட்ட தக்ஷன் உன் கணவன் எனக்கு மாமனார் என்று மரியாதை தந்து நமஸ்கரித்து வணங்குவது இல்லை. அதனால் தான் அவனை ஒதுக்கிவிட்டு யாகம் செய்கிறேன். நான் உனக்கே அழைப்புதரவில்லையே நீ இங்குவந்து தகராறு செய்கிறாய் மரியாதையாக உடனே இந்த இடத்தைவிட்டுச்செல். என்று கோபமாக கூறினான். இதனைக்கேட்ட தேவி இந்த சிவாபசாரமான யாகமே.

உன்அழிவிற்கு காரணமாக அமையும் என்றுகூறிவிட்டு தக்ஷனால் வளர்க்கப்பட்ட இந்த சரீரத்தை அழித்துவிட எண்ணி தபோக்கினியால் இந்த சரிரத்தை அழித்துக்கொண்டதை அறிந்த சிவபெருமான் உக்கரமானார் அந்த உக்கரத்திலிருந்து உக்கரமான வீரபத்தரர் தோன்றினார். வீரபத்திரரை தக்ஷயாகத்தையும் தக்ஷனையும் அழிக்க சிவபெருமான் ஆணையிட்டார்.

அதுசமயம் வெகுகாலமாக மிககடுமையான தவம் செய்து கொண்டிருந்த சூரபதுமனுடைய தவத்தில் மகிழ்ச்சியடைந்துள்ள சிவபெருமான் காட்சிதந்து யாதுவரம் வேண்டுமெனக்கேட்டார். சூரபத்மன் தான் நீண்டகாலம் வாழ்ந்து ராஜ்ய பரிபாலனம் செய்து வரவும்ஐந்து முகத்தாலும் மரணம் ஏற்படக்கூடாது.என வரம் கேட்டான். (விஷ்ணுவிற்கு ஒருமுகம், அக்னிக்கு இரண்டுமுகம், தத்தத்ரேயனுக்கு மூன்று முகம், பிரம்மனுக்கு நான்கு முகம், சிவபெருமானுக்கு ஐந்து முகம்) வேண்ட முழுவதும் தருபவனாகசிவபெருமான் அப்படியே ஆகட்டும். என்று ஐந்து முகத்தாலும், மரணம் ஏற்படாது என்றும் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஏகசக்ராதிபதியாக அரசாள்வாய் என்று வரம் தந்தருளினார்.

தேவி தன்னை தபோக்னியால் அழித்துக்கொண்டு பிரிந்ததால் சிவபெருமான் திருக்கயிலையில் அதிகாரநந்தியை காவலாக இருக்கசெய்து மன்மதனைதவிர வேறுஎந்த தேவர்களையும் முனிவர்களையும் உள்ளே அனுமதிக்காதே என்று உத்தரவிட்டு யோகதட்க்ஷிணாமூர்த்தியாக தவத்தில் அமர்ந்துவிட்டார்.

வெகுகாலமாக புத்ரிவரம் வேண்டிதவம்செய்து வந்த பர்வதராஜனின் தவத்திற்கு மனம் இறங்கி இமயமலையில் உள்ள மானஸரோவில் ஒருதாமரையில் தேவி ஒரு பெண்குழந்தையாக காக்ஷிதந்ததை அறிந்த பர்வதராஜன் அந்த குழந்தையை எடுத்து தன் மனைவியான மேனாதேவியிடம் தந்து அந்த குழந்தைக்கு பார்வதி என்று பெயரிட்டு அன்புடன் வளர்த்து வந்தார்கள்.

சிவாபசாரமான தக்ஷயாகத்தில் கலந்துகொண்ட தேவர்களும் முனிவர்களும் சூரபதுமனின் ஆட்சியில் பல இன்னல்களுக்கு ஆளாகி கஷ்டபட்டு வந்தார்கள். தேவர்களும் முனிவர்களும் ஸ்ரீமஹா விஷ்ணுவிடம் சென்று வணங்கி தங்கள் கஷ்டங்களைகூறி நிவாரணம் கேட்டார்கள்.

ஸ்ரீமஹாவிஷ்ணு சூரபத்மனுக்கு சிவபெருமானால் வரங்கொடுக்கப்பட்டுள்ளது. அதை சிவசக்தியால்தான் நிவர்த்திசெய்ய முடியும், சிவபெருமான் திருகயிலாயத்தில் தவத்தில்இருக்கிறார். சிவசக்தியாகிய தேவியோ இமாலயத்தில் பரவதராஜ குமாரியாக தவத்தில் இருக்கிறாள். இருவரும் இணைந்தால்தான் ஆறுமுகப்பெருமான் தோன்றி நமக்கெல்லாம் நிவாரணம் கிடைக்கும். அதற்கு நாம் தவம்செய்யவேண்டும் என்று கூறினார். அதன்படி தேவர்களும் முனிவர்களும் சிவபெருமானை நோக்கி கடுமையான தவம்செய்திடவே சிவபெருமான் எல்லோராலும் அறியக்கூடிய தான தமது ஐந்து முகமான ஈசானம்,

தத்புருஷம், அகோரம் வாமதேவம், ஸத்யோஜாதம், ) என்ற ஐந்து முகத்துடன் ஞானிகளால் மட்டும் அறிந்து வழிபடக்கூடியதான அதோமுகத்தோடு இணைத்து ஆறுமுக சிவபெருமானாக காக்ஷிதந்து அனுகிரஹம் செய்ததை ஐந்தாம் திருமுறையில் தனித்திரு குறுந்தொகையில் திருநாவுகரசு நாயனார்.

ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்
ஞானத்தால் தொழுவேன் உனைநான் அல்லேன்
ஞானத்தால் தொழுவார்கள் தொழுக்கண்டு
ஞானத்தால் உனைநானும் தொழுவேனே என்பார்.

ஞானிகளால் மட்டும் அறியக்கூடியதான அதோமுகத்தைப்பற்றி சிவாகமும் அதன் பத்ததிகாரர்களும் தெளிவாகக் கூறியுள்ளதைக் காண்போம்.

சிவபெருமானை அறிவதற்கு சிவாகமம் சமயதீக்ஷை, விசேஷதீக்ஷை, நிர்வாணதீக்ஷை, அசார்யாபிஷேகம், இதனை சரியை, கிரியை, யோகம் ஞானம் என்று நான்கு பாதங்களாக கூறுகிறது.

சரீயை சமயதீக்ஷை பெற்று ஸ்தூலபஞ்சாக்ஷரஜபத்துடன் சிவாகமத்தைப் படிப்பதற்கும் சிவகைங்கர்யங்கள் செய்வதற்கும். கிரியை விசேக்ஷ தீக்ஷைப்பெற்று சூஷ்ம பஞ்சாக்ஷரஜபத்துடன் க்ஷணிகலிங்கபூஜை, செய்வதற்கு யோகம், நிர்வாண தீக்ஷை பெற்று ப்ராஸாதபஞ்சாக்ஷரஜபத்துடன் உடையவர் சிவலிங்கபூஜை செய்வதின்பயனாக ஞானம்கிடைக்கச்செய்யும் அந்த ஞானத்தின் பயனாக யோகத்தால் பூதசுத்தியும், ஞானத்தால் அந்தர்யாக பூஜையையும் அறிந்து ஞானத்தால் சிவனருளைப்பெற்று சிவனருள் செல்வனாக திகழ முடிகிறது. அந்தர் யாகத்தை உட்பூஜை, ஞானபூஜை, என அழைக்கப்படுகிறது.

## ஞான பூஜை

சிவாகமத்தில் அகோரசிவாச்சாரியார் பத்ததியில் அந்தர்யாகம் ஞானபூஜை, ஹ்ருதயத்தில் பூஜையும் நாபிதொப்புளில் ஹோமமும், புருவநடுவில் ஜப தியானமும், செய்ய கூறுகின்றது. இருதய கமலத்தில் நாதரூபமுமான சிவனை மனதால் ஸ்தாபனம் செய்து புருவநடுவிலிருந்து உண்டாகும் அமிருதத்தால் அபிஷேகம் செய்து நமது புத்தி யை சந்தனமாக சாத்தி மனதில் உண்டாகும் எட்டுகுணங்கள் 1.அஹிம்ஸை,ஒரு புஷ்பமாகவும், 2.இந்திரியங்களை கட்டுபடுத்துதல், ஒரு புஷ்பமாகவும், 3. மனதில் ஏற்படும் பொறுமை ஒரு புஷ்பமாகவும், 4. தயை,(மன்னிக்கும் சுபாவம்) 5. மனதில் ஏற்படும் ஞானத்தை ஒரு புஷ்பமாகவும் 6.மனதில் ஏற்படும் ஸத்யபுத்தி ஒரு புஷ்பமாகவும், 7,மனதால் செய்யும் தவத்தை ஒருபுஷ்பமாகவும், 8. மனதில் ஏற்படும் சிவோஹம் பாவனை ஒரு புஷ்பமாகவும், ஆக எட்டு புஷ்பத்தினால் அர்ச்சனைசெய்து மனதில் ஏற்படும் சாந்தி பொறுமையான பாத்யஅர்க்ய ஆசமனியம்தந்து மனது என்பது பாத்ரமாக கற்பித்து அதில் பிராண அக்னியால் அஹங்காரம் என்ற

எண்ணத்தை தூபமாகபோட்டு சமர்ப்பிக்கவும், பிறகு நம்மிடம் உள்ள சிவஞானத்தை தீபமாகதந்து நம் சரீரத்தில் உள்ள பிருத்வி (மண்) அப்பு (ஜலம்) தேயு (அக்னி) வாயு (காற்று) ஆகாயம்(சப்தம்) ஆகிய பஞ்சபூதங்களும் ஐந்து உபசாரங்களாகவும், ஸமர்பித்து நம் உள்ளத்தில் உண்டாகும் நாதத்தை இறைவனுக்கு நிவேத்தியமாக ஸமர்பித்து ஹோமம், செய்ய இறைவனிடம் பிரார்த்தித்து நம்முடை நாபியை ஹோமகுண்டமாக பாவித்து நமது புருவமத்தியிலிருந்து உண்டாகும். அமிருதத்தை ஆஜ்யமாக ( நெய்) பாவித்துமனதால் ஹோமம் செய்து பூர்ணாஹுதியும் செய்து புருவநடுவில் பிந்து ஸ்தானத்தில் ஈஸ்வரனை தியானம் செய்து உட்பூஜை இறைவனுக்கு ஸமர்பித்து வெளிபூஜையை செய்ய பிரார்த்தித்துக்கொண்டு வெளிபூஜையை ஆரம்பிக்கவேண்டும். உட்பூஜையில் உள்ள அதோ முகம் ஒன்றுடன் வெளிமுகமாக ஈசானம் தத்புருஷம், அகோரம், வாமதேவம், ஸத்யோஜாதம், ஐந்துமுகத்தில் உள்ள நெற்றிக்கண்ணிலிருந்து உண்டான ஆறுஜோதி பொரியிலிருந்து உண்டான பொறிகள் அக்னியும், வாயும் இணைத்து சரவணபொய்கையில் சேர்க்க அதிலிருந்து உண்டான ஆறுகுழந்தைகளை ஒன்றாக இணைத்து பார்வதி தேவி தூக்கியதால் ஆறுமுகஸ்கந்தனானான். சிவனுக்கும், ஆறுமுகனுக்கும் பேதமில்லை என்று சிவாகமம் கூறுகின்றது. அதனால் ஆறுமுக சிவனாக வழங்கி வந்தது.

ஆறுமுக சிவன் வரலாறு சம்பூர்ணம்



# ருத்திர ஹோமம்



## ஓம்நமோ பகவதே ருத்ராய

ஓங்காரபூர்வமாக ஆரம்பித்து ஓங்காரமுடிவாக ஓதவேண்டியது எழுதா மறையென வழங்குவதுதான் வேதமாகும். பிரத்யட் சத்தினாலோ அனுமானத்தினாலோ அறியமுடியாததை அறிவதற்கு சாதனமாகவுள்ளது. வேதம் இந்த வேதமானது ருக்கு, யஜுர், சாம, அதர்வண என்று நான்கு பாகமாகவுள்ளது. வேதம் நான்கில் யஜுர் வேதமானது நூற்றியொரு சாகை (கிளை)களையுடையது.

ஏகசதம் யசுச்சாகாஸ்தாஸுருத்ரோப நிஷத் ஆம்னாயதே
சதச்சாகா கதம்ஸாக்ஷாத் சதருத்ரிய முச்யதே

யஜுர் வேதத்தில் உள்ள நூற்றியோரு சாகைகளில் நூறு சாகைகளினால் பரமேசுவரனை தோத்திரம் செய்வதினால் சதருத்ரியம் சாகை என்ற பெயர் உண்டாயிற்று.

நூற்றியொரு சாகைகளில் நடுவாகவுள்ளது. ஐம்பத்தொன்றாவது சாகையான தைத்திரிய சாகையாகும். தைத்திரிய சாகைஏழு காண்டங்களை கொண்டது. நடுவாகிய நான்காம் காண்டத்தில் நடுவாகவுள்ளது ஸ்ரீருத்ரமாகும். ஸ்ரீருத்ரத்தின் நடுவில் அமைந்துள்ளது ஸ்ரீபஞ்சாக்ஷரமஹா: மந்திரமாகும். இதனையே ஞானக்குழந்தையான திருஞானசம்பந்த சுவாமிகள் வேதநான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமசிவாயவே என்று அருளிசெய்தார். ஸ்ரீருத்ரம்

முழுமையும் ஸ்ரீபரமேஸ்வரனையே துதிக்கின்றது. சத ருத்ரீயம் ருத்ரோபநிஷத் ஸ்ரீருத்ரம், நமகம், என்ற பெயராலும் அழைக்கப்படுகிறது.

ஸ்ரீபரமேஸ்வரனுடைய மகிமைப் பற்றியோ அவரது மூச்சுகாற்றாக கருதப்படுகின்ற வேதத்தின் நடு நாயகமாக விளங்கும் ஸ்ரீருத்ரத்தின் பெருமையை பற்றியோ கூறுவதானால் மிகவிரிவாகும் என்பதால் சிறிதுதான் எழுதுகிறேன்.

ஒருமரத்தின் வேரில் நீருற்றினால் கிளைகள் எல்லாம் செழிப்பது போல் ஸ்ரீருத்ர ஜபத்தால் எல்லா தேவதைகளும் திருப்தி அடைகின்றன. என்று சதசம்ஹிதை கூறுகின்றது.

விருக்ஷஸஸ்ய மூலசாகேன சாகபுஷ்யந்திவையதா
சிவருத்ரஜபாது ப்ரிதே ஏவாஸ்ய தேவதா அதோ ருத்ர ஜபாதேவ புக்திமுக்தி ப்ரஸித்தித:

இவ்வளவு மகிமையுடன் கூடி எங்கும் நிறைந்துள்ள ஸ்ரீபரமேஸ்வரனின் பரமகல்யாண குணங்களையெல்லாம் எடுத்துக்கூறும் ஸ்ரீருத்ரத்தின் 169 மந்திரங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மந்திரத்திற்கும் ரிஷிசந்தஸ் தேவதைகள் இருக்கின்றன. அவைகளை குருமுகமாக அறிந்து தியான சுலோகத்தில் கூறப்பட்டுள்ள ஸ்வரூபத்தை தியானித்து மந்திரமாக ஜபம் செய்தால் இஷ்டசித்தி ஏற்படுகிறது.

மஹார்ணம் முதலிய நூல்களிலே ஸ்ரீருத்ரபாராயணம் ஸ்ரீருத்ர ஹோமம் முதலியவைகளில் முறைகள் நன்கு விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

ருத்ரபாராயணம் ஐந்து வகையாக கூறப்பட்டுள்ளது.

1. ஸ்ரீருத்ரமும் சமகமும், ஒருதடவை பாராயணம் செய்வது ஸ்ரீருத்ர ஜபமாகும். ஸ்ரீருத்ரத்தை சிவமாகவும், சமகத்தை சக்தியாகவும் கூறுவார்கள்.
2. ஸ்ரீருத்ரத்துடன் சமகத்தின் ஒரு அனுவாகத்தை மட்டும் சேர்த்து 11 ஆவர்த்தி ருத்ரமும் ஒரு ஆவர்த்தி சமகமும் பாராயணம் செய்வதற்கு ஏகாதசருத்ர ஜபமாகும்.
3. ஏகாதசருத்ரத்தைப்போல் பதினோரு மடங்கு அதிகஜபம் செய்தால் ருத்ர எதாதசினி யாகும்.
4. ருத்ரஏகாதசினி போல் பதினொரு மடங்கு அதிகஜபம் செய்தால் மஹாருத்ரமாகும்.
5. மஹாருத்ரத்தை போல் பதினொருமடங்கு அதிகஜபம் செய்வது அதிருத்ரஜபமாகும்.

இந்த ருத்ரஜபமானது ஸகல பாபங்களை போக்கும், ஸாதாரண வியாதி முதல், பிரவிப்பிணிகளையும், போக்குவதில் சிறந்தது. என்பதை ஸ்ரீருத்ரமே (அத்யவோசததி வக்த்ரோ ப்ரதமோதெய்வோ பிஷகு) முதன்மையான தெய்வ வைத்தியர் என்கிறது. அதனால்தான் சிவபெருமானை வைத்தியநாதர் என்று அழைக்கப்படுகிறார்.

மேலும் ஸ்ரீருத்ரமானது

ஆயிரம் ஆவர்த்தி பத்தாயிரம் ஆவர்த்தி ஸ்ரீருத்ரஜபபாராயணம், செய்வதால் அபமிருத்யு தோஷம் யமபயம் நீங்கும் என்று கூறுகிறது. ஸ்ரீருத்ரத்தை பாராயணம் செய்வதுடன் ஸ்ரீருத்ரஹோமம்செய்வதினால் ஸ்ரீபரமேஸ்வரன்முதல் எல்லா தேவர்களும் பரமப்ரிதி அடைகிறார்கள்.

மேலும் அக்னி ஹோத்ரம் , தர்சபூரணமாஸம் சாதுர்மாஸ்யம், நிருடசுபந்தயாகம், ஜோதிஷ்டோமயாகம், மற்றும் எல்லா யாகங்கள் செய்வதின் பலனையும் தருகின்றது.

ஸ்ரீ ருத்ரஹோமமானது ஸ்ரீருத்ரத்தை 3-6-16-48-169 என்று ஐந்து வகையாக பிரித்து ஹோமம் செய்யலாம்.

ஸ்ரீருத்ரபாராயணம் செய்ததில் நூற்றில் ஒருபங்கு சதாம்சம் என்றும் பத்தில் ஒருபங்கு தசாம்சம் என்றும் பாராயணம் செய்த அளவே ஹோமம் செய்வது ஸம்பூர்ண ஹோமமாகும். எந்த முறையை அனுசரித்து செய்தாலும் சமகமந்திரத்தால் முடிவில் வஸோாத்தாராஹோமம் மிக அவசியமாகும். சமக மந்திரமானது. நமக்கு இந்த உலகில் என்னென்ன தேவைகளோ அவ்வளவையும் நமக்காகப் பிரார்த்திக்க செய்கிறது.

வாஜஸ்ச்சமே என்று ஆரம்பித்து புவனச்சாதிபதிச்ச ஸ்வாஹா என்பது வரை 371-பிரார்த்தனை மந்திரங்களைச் சொல்லிக்கொண்டே இடைவிடாது தாரையாக நெய்யினால் ஹோமம் செய்வதுதான் வஸோத்தாரோ ஹோமமாகும்.

இந்த மாதிரி ஹோமம் செய்வதினால் நமக்கு இடைவிடாது தன, தான்யம், மனைவி, மக்கள், பட்டம், பதவி, யாவும் தந்து வாழ்க்கையை பூரணத்வம் அடையச்செய்யும்,

மந்திரம் நான் மறையாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மையாள்வன
செந்தழல் ஓம்பியசெம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே.

**ருத்ர மஹிமை சம்பூர்ணம்**



## அஷ்டபந்தனம்



இறைவனுக்கும் உயிர்களுக்கும் இடையே பேரருட் சக்தியாக நின்று என்றும் நீங்காத பினைப்பினை உண்டு பண்ணும் அடிப்படை தத்துவ கருத்தமைந்த நிகழ்ச்சியே அஷ்டபந்தனம் என்ற எண்வகைப்பிணைப்பு ஆகும்.

அஷ்டபந்தனம் என்ற சொல் நம் நாட்டில் மருந்து சாத்துதல் என்ற வழக்கச்சொல்லால் குறிக்கபெருதல் கண்கூடாகும்.

இதனைசிவாகமங்கள் மிகவும் விரிவாக எடுத்து விளக்குகின்றன. இறைவனாகிய லிங்கமூர்த்திக்கும் அவனருட்சக்திவடிவாம் அன்னைபீட சக்திக்கும் உள்ள பினைப்பாக கூறுகின்றது. அஷ்டபந்தனம் குறைவுபடின் மக்கட்கு ஏற்படும் தீமைகள் பற்றி ஆகமங்கள் விரிவாக கூறுகின்றன.

இவ்வாறு இறைவனிடம். உயிர்களை பிணைத்தலையே பந்தனம் கட்டுதல் என்பதாகப் பேசப்படுகின்றது. இறைவன் தன்னில் நீங்காத அருட்சக்தியை ஆனைவழியே ஐந்தொழிலையும் தன்வயத்தாற்செய்யும், திறமே மேலேகண்ட சொல்லின் பொருளாகும். இந்த சக்திநிபாதநிலையே சிவசக்திசமாயோகம் எனவும் பரையோகம் எனவும் ஆகமங்கள் கூறும்.

# ஆக்ஞயா ஸமவேதயா

என்பது சிவஞானபோதம் இறைவன் அஷ்டமூர்த்தி வடிவினன் அவனை எட்டு சக்திகளின் துணைகொண்டே இணைத்தல் வேண்டும். பிருத்வி (நிலம்) அப்பு (நீர்) தேயு (தீ) வாயு (வளி) ஆகாசம்(விசும்பு) சூரியன் (கதிர்) சந்திரன் (மதி) உயிர் (உயிர்) என எண் வகையினன். என்று இறைவன் திருமேனி பேசப்படுகிறது. இவ்வஷ்ட மூர்த்திகளும்

ஏஷாஸா ஸாக்ஷிணி சக்தி : சங்கரஸ்யா பிசங்கரி
சிவாபின்ன தயாஹீநச்சிவ : ஸாக்ஷாஹிரந்தக : என்றும்

அக்னியில் சூடுபோல நீங்காத இறைவியின் பிணைப்பு இல்லாவிடின் எந்தை கருணையுள்ளவராகார் என்பது சூதசங்கிதை வாக்யமாகும். இந்த எட்டு பொருட்களிலும் உட்பொருளாக பரதேவதை ஊடுருவி இருப்பதாலே உலகம் முறையே நடைபெறுகிறது என்பதை

த்வம் சந்திரிகாசசிநி திக்மரு சௌருதித்வம்
த்வம் சேதநாஸி புருஷே பவநே பலம்த்வம்
த்வம் ஸ்வாது தாஸிஸலிலேசி கினித்வம் ஊஷ்மா
நிஸ்ஸாரமேத தவிலம் த்ருதேயதிஸ்யாது.

சந்திரனில் ஒளிநீயே அருக்கனில் வெம்மை உயிர்களில் உணர்வு காற்றினில் வேகம் நீரினில் சுவை சுடரில் ஒளி ஆகவே உன் பிணைப்பற்றேல் எல்லாம் பொருள் அற்றதாகஆகும் என்பது கருத்தாகும். இவ்வாறு தத்துவமயமான கருத்துகொண்டதே அஷ்டபந்தனமாகும். அஷ்டபந்தன முறைகளை ஸஹஸ்ராகமம் இரண்டு விதமாக சொல்கிறது.

அபக்வம் பக்வமேவந்து த்விதம் பந்தனக்ரமாது
பக்வந்து பாச யோக்யம்ஸ்யாது அபக்வம் மதனம் பவேது
பக்குவா பக்குவ மிதம் ஞ்ஞாத்வா பந்தயேத் ஸூத்ருடம் புத :
அபக்குவம் தைவிகம் ப்ரோக்தம் பக்குவமே வந்து மாநூஷம்.
பக்குவம், அபக்குவம் என இரண்டு வகைப்படும்.

பக்குவம் என்ற முறை மருந்துகளை கலந்து தீயிலிட்டு காய்ச்சுதல் அபக்குவம் என்பது உரலில் மருந்துகளை கலந்து இடித்து எடுத்தல் இரண்டு வகையாகவும் பந்தனம் செய்யலாம். ஆனால் இடித்து எடுத்தல் தெய்வீகம் என்றும் காய்சுதல் மானுஷம் என்றும் கூறப்படுகின்றது.

## அஷ்டபந்தன சாமான்கள் அளவும் பெயர்களும்

த்ருபாகம்சக்ராசூர்ணம் த்விபாகம் குந்தருஷ்ககம்
லாக்ஷாசூர்ணந்து பானகம் மதுச்சிஷ்டம் த்ருபாககம்
காஷாயந்து திருபாதம் ஸ்யாது ததைவ ரக்ததூலகம்
நவநீதம் த்ருபாகம் ஸ்யாது ஹிங்குலம் பாகமேவச
ஹிங்குல பாவகாலெது பந்தனம் பலஹீனகம்

சுக்கான் பொடி மூன்று பாகமும், குங்கிலியம் இரண்டு பாகம், கொம்பரக்கு ஒருபாகம், தேன்மெழுகு முக்கால் பாகமும், நற்காவி முக்கால் பங்கும், செம்பஞ்சுருக் கால்பங்கும், எருமைவெண்ணை முக்கால் பங்கும், ஜாதிலிங்கம் கால்பங்கும், கூட்டி திரும்ப திரும்ப எட்டு முறை இடித்து எடுக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| சக்கரா | - | சுக்கான் பொடி |
| குந்தருஷ்கம் | - | குங்கிலியம் |
| லாஷாசூரணம் | - | கொம்பரக்கு |
| மதூச்சிஷ்டம் | - | தேன்மெழுகு |
| காஷாயம் | - | நற்காவி |
| ரத்ததூலம் | - | செம்பஞ்சு |
| நவநீதம் | - | எருமைவெண்ணை |
| ஹிங்குலம் | - | ஜாதிலிங்கம் |

அஷ்டபந்தன மருந்து இடித்து சாற்றும்முன் கணபதிபூஜை புண்யாகவாசனம் செய்து சுத்தம்செய்த உரலில் உலக்கையை நெல்பரப்பி அதன்மீது வைத்து சந்தனம், குங்குமம், புஷ்பம், வஸ்திரங்களால் அலங்காரம் செய்து உரலில் பிருத்வியையும், உலக்கையில் மேருவையும் பூஜைசெய்து எட்டு ( மருந்து ) திரவ்வியங்களில் காவியஸம்: ஓம்யகாராயநம: ஓம்ரகாராய நம: ஒம்லகாராய நம: ஓம்வகாராய நம : ஓம்மகாராய நம: ஓம்ஷகாராய நம: ஓம்ஸகாராய நம: ஓம்ஹகாராய நம: என்று பூஜித்து

| | | |
|---|---|---|
| 1. சுக்கான் பொடியில் | - | ஓம் விருஷாணியை நம: என்றும் |
| 2.குங்கிலியத்தில் | - | ஓம் பத்ராயை நம! என்றும் |
| 3.கொம்பரக்கில் | - | ஓம் கர்ஷிண்யை நம: |
| 4.தேன்மெழுகில் | - | ஓம் இந்து மதியை நம: |
| 5.நற்காவியில் | - | ஓம் மாலிந்யை நம : |
| 6.செம்பஞ்சில் | - | ஓம் மாதவ்யை நம: |
| 7.எருமைவெண்ணையில் | - | ஓம் ரமண்யை நம: |
| 8.ஜாதிலிங்கத்தில் | - | ஓம் வாமின்யை நம: என்றும் |

பூசித்து தூபதீபம் காட்டி எல்லாம் சத்தியமாக பாவித்து சிவநாமம் (போற்சுண்ணம்) கூறி இடித்தெடுத்து சிற்பிகளை (ஸ்தபதி) கொண்டு பீடத்தையும், லிங்கத்தையும், மூர்த்திகளை சார்த்தும்படி செய்யவேண்டும். சிவலிங்கத்திற்கு மூன்று இடங்களில் பிரும்மபாகம் பீடம் லிங்கத்தில் அடிபாகம் 2.விஷ்ணுபாகம் ஆவுடையார் நடுபாகத்திலும் ருத்ரபாகம் பாணத்தையும், ஆவுடையார் இணைந்து சாத்தவேண்டும். மற்ற மூர்த்திகளுக்கு பீடத்தையும், மூர்த்தியும் இணைந்து சாத்தவேண்டும். ஜாதிலிங்கம் எந்தகாரணத்தைகொண்டும் குறைவுபடுத்துதல் கூடாது. இவ்வாறு செய்யப்படும். அஷ்டபந்தனம். உயிர்சத்துள்ள ரசத்தின் சேர்க்கையால் பனிரெண்டு ஆண்டுகள் கெடாது. பிணைப்புடன் இருக்கும் எனவும், இவ்வாறு செய்பவர் இம்மை மறுமை பயனை அடைவார் என்று காரணாகமும் இம்மையே தரும் சோறும் குறையும் அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் குறைவில்லையே என்று திருமுறையும் கூறும்.

அஷ்டபந்தனம் சம்பூர்ணம்





உ

# ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி வரலாறு

உமா தேவியானவள் தக்ஷன் செய்யும் சிவாபசாரமான யாகத்தை தடுத்து பல அறிவுரைகளை கூறியும் கேட்காத தக்ஷன் வளர்த்த இந்த சரீரத்தைவிடஎண்ணி தபோக்னியினால் அழித்துக்கொண்டு வெகுநாட்களாக பெண்குழந்தை வேணுமென்ற பர்வதராஜனுடைய தவத்திற்கு இறங்கி மானஸரோவர் என்ற ஏரியில் ஒருதாமரை பூவில் குழந்தையாக காட்சி அளிக்க அதனைக்கண்ட பர்வதராஜன் மிகமகிழ்ச்சியோடு எடுத்து அந்த குழந்தைக்கு பார்வதி என்று பெயரிட்டு வளர்த்து வந்தான்.

சக்தியை பிரிந்த சிவபெருமான் சிவ யோகத்தில் அமர்ந்திருந்தார். சனகர், சனந்தனர், சனாதரர், சனத்குமாரர், என்ற நான்கு முனிவர்கள், சிவபெருமானைநோக்கி கடுந்தவம் செய்தார்கள் அவர்களுக்கு சிவபெருமான் யோகத்திலிருந்தவாரே காக்ஷிதந்திட அந்த நான்கு முனிவர்களும் சிவபெருமானிடம் நாங்கள் நான்கு வேதங்களையும் ஆறங்கங்களுடன் கற்றுஉணர்ந்தும். மனதில் தெளிவு ஏற்படவில்லை. தாங்கள்தான் அருள்பாலித்து தெளிவுபெறச்செய்யவேண்டும். என்று வேண்டினார்கள். சிவபெருமான் யோகத்திலிருந்தபடியே மௌனமாக தமது வலது கரத்தால் சின்முத்திரை காட்டி அருள்பாலித்தார்.

சின் முத்திரை என்பது ஐந்து விரல்களில் கட்டைவிரல் பரமாத்மாவான. இறைவனையும் ஆள்காட்டி விரல் ஜீவாத்மாவான மனிதனையும், நடுபெருவிரல் ஆணவத்தையும், மோதிரவிரல் கன்மத்தன்மையுடையதாகவும், சுண்டுவிரலான சிறுவிரல் மாயைத்தன்மையும், யுடையதாகவும்,

மனிதன் மும்மலங்களான ஆணவம் கன்மம், மாயையுடன் கூடியிருப்பதை நான்கு விரல்கள் சேர்ந்திருப்பதையும் இறைவனான கட்டை விரல் தனித்திருப்பதைகாண கூடியதாக உள்ளது.

மனிதன் இறைவனை சரணடைந்தால்தான் மனக்கவலை நீங்கி மனத்தெளிவு ஏற்படச்செய்யும் இதனை திருவள்ளுவர்.

தனக்குவமையிலாதான் தாள் சேர்ந்தர்க்கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. என்பர்

மனிதனான ஆள்காட்டி விரல் இறைவனை கட்டைவிரல் அடியைத்தொடும்போது மும்மலங்களான மூன்றுவிரல்களையும்விட்டு விலகி இறைவனை வணங்குவதுபோல் காக்ஷி தருவதே சின்முத்திரையாகும். இதனைக்கண்டு நான்கு முனிவர்களும் தெளிவு பெற்றார்கள் என்பதை தனிப்பாடல்.

கல்லாலின் புடை அமர்ந்து நான்மறை
ஆறங்கமுதல் கற்றகேள்வி
வல்லார்கள் நால்வர்க்கும் வாக்கிருந்த
பூரணமாய் மறைக்கப்பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டி
சொல்லாமற் சொன்னவர்க்கு நினையாமல் நினைந்து
பவதொடக்கை வெல்வாம்.

## சமஸ்கிருத சுலோகம்

மௌனம் வ்யாக்யா ப்ரகடித பரப்ரமதத்துவம்
யுவானாம் வரிஷ்டாந்தை வஸிதரிஷிகனை:
ஆவ்ருதம் பிரும்மநிஷ்டை ஆச்சார்யேந்திர
கரகலித சின்முத்ர மானந்த ரூபம் ஸ்வாத்மாராமை:
முதித வதனம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி மீடே.

வடவிருக்ஷமான ஆலமரத்தடியில் அமர்ந்து
மும்மலங்களை போக்கும் திருபதார்த்த
சைவ சித்தாந்தத்தை உபதேசித்தார்

## திருநாவுக்கரசு சுவாமிகள்

வடமொழியும், தென்தமிழும், மறைகள் நான்கும் ஆனவன்கான் என்றுபாடியுள்ளார். வடமொழிஎன்பது வட ஆலமரத்தடியில் அமர்ந்து சைவசித்தாந்தங்களை கூறியதை குறிக்கும். சொல்லே வடமொழியாகும்.

சிவபெருமானுடைய ஐந்து முகங்களில் தெற்காக (தக்ஷிணா) வுள்ளமுகம் அகோரமுகமாகும் அகோர என்றால் கோரமில்லாதது அகோரம் சாந்தமாகவுள்ளதே தக்ஷிணாமூர்த்தியாகும்.

குரு (வியாழ பகவானின் உபாசனாமூர்த்தியான தக்ஷிணாமூர்த்தியின் திருவருள் பெற்றதால் தேவர்களுக்கு குருவாக இருக்கும் தன்மையைப் பெற்றார். மேலும் குருக்ரஹத்தால் ஏற்படும் தோஷங்களைப் போக்கிட ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியை பூஜித்து வழிபட்டால் அந்த தோஷங்களெல்லாம் நிவர்த்தியாகு மென்பது சாஸ்திரங்களில் கருத்தாகும்.

தக்ஷிணாமூர்த்தியினால் எட்டு வடிவத்தில் நமக்கெல்லாம் அருள் பாலித்து வருகிறார். என்பதை சிவாகமம் எடுத்து கூறுகிறது.

1. யோக சாஸ்திரங்களையும் யோக முறைகளையும் நமக்கு உபதேசிப்பவராக ஸ்ரீயோக தக்ஷிணாமூர்த்தியாக உள்ளார்.

2. மெய்பொருளான சைவசித்தாந்தத்தை உபதேசிப்பவராக ஸ்ரீமேதா தக்ஷிணாமூர்த்தியாக உள்ளார்.

3. சிவஞானத்தைத் தருகின்ற சிவாகமங்களை உபதேசிக்ககிறவராக ஸ்ரீஞான தக்ஷிணாமூர்த்தியாக அருள்பாலித்து வருகிறார்.

4. தனுகரணபுவன போகங்களை தருபவராக அருள்பாலிப்பராக உள்ளவர். ஆஸீந தக்ஷிணாமூர்த்தியாக உள்ளார்.

5. மனக்கவலை போக்குகின்ற சங்கீதசாஸ்திரத்தை அருள்பாலிப்பவராக உள்ளவர் ஸ்ரீவீணாதர தக்ஷிணாமூர்த்தியாக உள்ளார்.

6. ரிஷிகளுக்கும், முனிவர்களுக்கும், வேத உபநிஷதங்களை உபதேசித்து அருள்பாலிப்பவர் ஸ்ரீகைலாய தக்ஷிணாமூர்த்தியாக உள்ளார்.

7. அண்டசராசரங்களையும் படைத்தும் காத்தும், பஞ்சகிருத்யங்களை செய்தும் வருபவராக உள்ளவர். ஸ்ரீதிருபுவன தக்ஷிணாமூர்த்தியாவார்.

8. தாம்செய்யும் எல்லா செயல்களையும் சக்தி மூலமாக செய்வதினால் அவரது அருளே சக்தியாகும். என்பதால் ஸ்ரீசக்தி தக்ஷிணாமூர்த்தியாக இருந்து அருள்பாலித்து வருகிறார்.

நாம் செய்யும் எந்த காரியங்களுக்கும் உபாஸிக்கும் எந்த மந்திரங்களுக்கும் தக்ஷிணாமூர்த்தியே குருவாக தியானித்து செயல்பட்டால் நாம் எல்லாவற்றிலும் வெற்றிபெற்றவராக ஆவோம்.

குரவே ஸர்வ லோகானாம்
பிஷஜே பவரோகினாம்
நிதயே ஸர்வ வித்யாணாம்
ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியே நம :

தக்ஷிணாமூர்த்தி வரலாறு சம்பூர்ணம்



# ஜோதிலிங்க

# (சொக்கப்பனை) தரிசனம்.



முன்னொரு காலத்தில் ஆயகலைகள் அறுபத்திநான்கினையும் அளித்திடும் கலைமகளான சரஸ்வதியின் நாயகனான பிரும்மதேவன் அறிவினால் வரும் அகந்தையினாலேயும்

சகல செல்வங்களையும் தந்திடும் செல்வத்திருமகளான லட்சுமியின் நாயகனான விஷ்ணுவானவர் செல்வத்தினால் வரும் செருக்கினாலேயும் தாம் தாமே பெரியோன் என்று வாதித்திட அவ்வமயம் ஒரு பெரும் ஜோதிபிழம்பு அங்கு தோன்றியது. அந்த ஜோதியின் அடிமுடியினைக் காண்பவரே பெரியோன் என்று ஒரு அசரீரி உண்டாயிற்று.

பிரும்மதேவன் அன்னபட்சி வடிவத்தோடு முடியினைக்காண மேல்நோக்கிச் சென்றார். விஷ்ணுவானவர் வராக (பன்றி) வடிவத்தோடு அடியினைக்காண பாதாளம் ஏழுக்கீழும் தேடிச்சென்றார். ஆனால் அவர்களால் அடிமுடியினைக் காணமுடியவில்லை. அவர்கள் இயற்கைக்கு முரணாக சென்றதால் காணமுடியவில்லை.

தாமரையை நோக்கி செல்லவேண்டிய அன்னபட்சியானது முடியாகிய சடாரியை நோக்கி சென்றதாலும், காட்டினை நோக்கி செல்லவேண்டிய பன்றியானது திருவடித்தாமரையை நோக்கிச் சென்றதாலும் அடிமுடியினைக்காண முடியாமல் தோல்வியுற்றனர். அறிவினாலும் செல்வத்தினால் மட்டும் ஆண்டவனை அடைய முடியாது என்பதனை இந்த நிகழ்ச்சி விளக்குகிறதல்லவா?

ஜோதிபிழம்பாகத் தோன்றிய இறைவனை அன்னை பராசக்தி உலகத்தில் உள்ள எல்லா உயிரினங்களும் உய்வுபெற வேண்டி கருணையோடும் பக்தியோடும் வில்வத்தினால் அர்ச்சித்து வழிப்பட்ட இந்தக் காட்சியை எல்லா ஜீவராசிகளும் கண்டு வழிபடவேண்டி அருள்பாலிக்க வேண்டினாள்.

வேண்டமுழுதும் தருபவனான இறைவன் ஆண்டிற்கு ஒருமுறை எல்லோரும் தெரிசித்து வழிபட அருள்பாலிப்பதாகக் கூறினான். அந்ததினமே கார்த்திகை மாதம் பௌர்ணமியும் கார்த்திகை நக்ஷத்திரமும் கூடியநாளாகும், அன்று தீபபூஜை செய்ய சிவாகமம் கூறுகிறது.

(கிருத்திகாயாம் தீபபூஜனம்) என்று கூறுகிறது. அன்று எல்லா ஆலயங்கலிலும் நிறைய தீபங்களை ஏற்றி வழிபாடு செய்வதுடன் ஆலயத்தின் முன்புறத்தில் சொக்கபனை (அக்னிலிங்கம்) பூஜை செய்தது ஏற்றிட ஜோதிலிங்க சொரூபமாக தெரிசிக்க சிவாகமம் கூறுகிறது. ஜோதியாக இறைவனை வழிப்பட்டதை சிவாகமமும், நாயன்மார்களும், அடியார்களும் கண்ட காட்சியை

திருநாவுக்கரசு நாயனார் திருவையாறு தலத்தில் ஜோதியாக கண்டு தெரிசித்ததை திருவையாறு அகலாத செம்பொற்சோதி என்றும், சேக்கிழார் சுவாமிகள் தில்லையில் இறைவனை ஜோதி வடிவாக தெரிசித்ததை உலாகாலாம் உணர்ந்து ஓதற்கு அறியவன் நீல வுலாவிய நிர்மலி வேணியன்
அலகிற் சோதியன் அம்பலத்தாடுவான் மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம் என்றார். அருணகிரிநாதர் தாம் திருஆவினன்குடியில் ஜோதிவடிவமாக முருகனை தெரிசித்ததை திருப்புகழில் தீபமங்கள ஜோதி நமோநம என்பார். வள்ளளார், இறைவனை தைப்பூசத்தன்று ஜோதியாக தெரிசித்ததை அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி என்பார்.

கச்சியப்ப சிவாச்சாரியார் கந்த புராணத்தில் அருவமும் உருவாகி அநாதியாய் பலவாய் ஒன்றாய் பிரமமாய் நின்றஜோதி பிழம்பதோர்.............என்று தாம் முருகனை தெரிசித்த அனுபவத்தை கூறுகிறார். என்று சிவாகமம் கூறுகிறது.

ஜோதி வடிவமான இறைவனை ஜோதியப்பா என்று கூறியது மருவி சொக்கப்பா (சொக்கப்பனை) என்று வழங்கி வரலாயிற்று. நாமும் ஆலயத்தில் ஜோதி வடிவான (சொக்கப்பனையை) தெரிசித்து எல்லா நலங்களுடன் பல்லாண்டு வாழ்ந்து வருவோமாக.

ஜோதிலிங்க வரலாறு சம்பூர்ணம்

## வியதி பாதம்.

அரிது அரிது மானிடராய் பிறப்பது அரிது, மானிடராய் பிறந்தவர்கள் மகிழ்ச்சியாகவும் மிகுந்த செல்வத்துடனும், யோகத்துடனும் பிறத்தல் வேண்டும் என்பதற்காக நமது மூதாதையர்கள் மனிதனுடைய வாழ்க்கைக்கு ஐந்து அங்கமாக திதி வார நக்ஷசத்திர யோக கரணத்தை இணைத்துள்ளார்கள். மனிதன் ஜனித்தவுடன் ஜோதிடர்களை கொண்டு பிறந்த நக்ஷசத்திரம், திதி, வாரம், யோகம், கரணங்களைக்கொண்டு அவனுடைய வாழ்க்கையின் யோக பலன்களை அறிவார்கள் வாரங்கள் 7 (ஏழு) திதிகள் 16, நக்ஷசத்திரங்கள் 27, யோகங்கள் 27, கரணங்கள் 11, இதில் 17-வது யோகம் வியதிபாதம்.
இந்தயோகம் ஒரு தெய்வீகமான யோகம் இந்த யோகத்தில் மனிதனுடைய சுபகாரியங்கள் வர்ஜிக்கப்பட்டும் தேவ ரிஷி பித்ருக்களுக்கு மிக உயர்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. வியதிபாத யோகத்தில் ஆலயத்தில் விசேஷ பூஜைகளை ஆகமம் நிர்ணயம் செய்துள்ளது. வியதிபாத யோகத்தில் பித்ருக்களுக்கு தர்ப்பணம் முதலிய கிரியை செய்ய சாஸ்த்திரம் கூறுகிறது. கீதையில் கிருஷ்ணபரமாத்மா மாதங்களில் மார்கழியாக இருப்பதாக கூறுவார். மார்கழி தெய்வ வழிபாட்டிற்கு சிறந்தது. ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்துவ மதங்கள் முதலான எல்லா மதங்களும் மார்கழி மாதத்தில் சிறப்பு வழிபாடு/பண்டிகைகள் கொண்டாடி வருகின்றன. ஆனால் மனிதனுடைய சுபகார்யங்களுக்கு அனுமதியில்லை. அதேபோல் வியதிபாதம் தைவ கார்யங்களுக்கு, தெய்வ வழிபாடுகளுக்கு மிகவும் முக்கியத்துவம் தந்தது. மனித வாழ்க்கைக்கு அனுமதி தரவில்லை. வியதிபாதத்திலேயே தனூர் (மார்கழி) மாத வியதிபாதம் நடராஜ தரிசனம் வழிபாடு மிகச்சிறந்ததாக கூறப்பட்டுள்ளது.

வியதி பாத மஹிமை சம்பூர்ணம்




# சோமாஸ் கந்தர் வரலாறு



சுவர்க்கலோகவாசிகளான இந்திரன் முதலாகியதேவர்கள் நன்றி மறந்து சிவாபசாரமான தக்ஷயாகத்தில் கலந்துக் கொண்டதால் சூரபதுமனால் பல இன்னல்களுக்கு ஆளாகி வந்த தேவர்களுக்கு முருகப்பெருமான் திருவருளால் சுவர்கலோகவாசமும், தத்தம் பதவிகளும் கிடைத்தது. சுக வாழ்வு வாழ்ந்து வரும் நாளில் ஒருநாள் தேவர்கள் எல்லோரும் ஒன்றுகூடி நாம் நன்றி மறந்ததால் பல இன்னல்களை அனுபவித்தோம். இனிநாம்மெல்லோரும் நன்றியை மறக்காமல் நமக்கு வாழ்வளித்த ஸ்ரீமுருகப்பெருமானை முறையாக வழிபாடு செய்து நமது நன்றியினை தெரிவித்து கொள்ளவேனும். என தீர்மானித்தார்கள்.

இந்திரனுடைய தலைமையில் தேவர்கள் பால், தயிர், தேன், பஞ்சாமிருதம், பழவகைகள், பன்னீர் சந்தனம், குங்குமம், தேங்காய், தாம்பூலம் புஷ்பம், முதலிய பூஜா சாமான்களுடன் ஸ்ரீமுருகனுடைய வாசஸ்தலமான கந்த கிரிக்கு வெற்றிவேல் முருகனுக்கு அரோஹரா என்ற கோஷத்துடன் புறப்பட்டு சென்றார்கள்.

கோஷத்தோடு வருகின்ற தேவர்களை நோக்கி மீண்டும் உங்களுக்கு ஏதேனும் கஷ்டம் வந்துள்ளதா? எல்லோரும் ஒன்றாக வருகின்றீர்களே என்று முருகன் கேட்க. தேவர்கள் வணங்கி வேலுண்டு வினையில்லை. குஹனுண்டு குறைவில்லை. முருகா நீங்கள் இருக்கும்போது எங்களுக்கு எந்த கஷ்டமும் வராது. என்று கூறி மீண்டும் வணங்கினார்கள்.

முருகா தங்கள் கருணையினால் நாங்கள் எல்லோரும் நலமாக இருந்து வருகிறோம். தங்களுக்கு எங்களுடைய நன்றியினை தெரிவிக்கும் பொருட்டு பூஜா பொருட்களுடன் வந்துள்ளோம். தயவுசெய்து எங்களுடைய பூஜைவழிபாட்டினை ஏற்றுக்கொள்ள வேண்டுமெனக்கேட்டுக்கொள்கிறோம். என்றுதேவர்கள் கூற அப்படியா மிக்க மகிழ்ச்சி நானே எனது வெற்றிக்காக ஆசிகளுடன் வேல்கொடுத்த எனது அன்னைக்கு பூஜை வழிபாடு செய்து எனது நன்றியினை தெரிவிக்க நினைத்தேன். அதை இப்போது செய்திடலாம் என்று கூறினார்.

இப்பொழுது தேவர்களுடன் முருகன் பூஜா பொருட்களுடன் ஸ்ரீதேவியின் இருப்பிடமான பத்மாடவியில் உள்ள சிந்தாமணிக்ருஹத்தில் ஸ்ரீசக்கரராஜபீடத்தில் அறுபத்துநான்குகோடி யோகினிகள் சூழ்ந்துள்ள வாவரணத்தின் மத்தியில் உள்ள பிந்து மண்டல வாஸினியாகிய ஸ்ரீதேவியை

நோக்கி ஸ்ரீமுருகன் சென்று வணங்கிட ஸ்ரீமுருகனைகண்ட ஸ்ரீதேவி மகிழ்ச்சி பொங்க முருகா வா வா என்ன திடீர் விஜயம் என்று கேட்டுக்கொண்டே முருகனை தனது மடியில் தூக்கி வைத்துக்கொண்டு ஸ்கந்த மாதாவாக காட்சித்தந்தாள். முருகனை பார்த்து என்ன விசேஷம் தேவர்களுடன் வந்துள்ளாய் என்று கேட்க முருகன் அம்மா சூரபதுமனிடமிருந்து தேவர்களுக்கு சுவர்க்கலோக பதவியை மீட்டு தந்ததற்காக எனக்கு நன்றி தெரிவிப்பதற்காக பூஜைசெய்வதாகக் கூறி கந்தகிரிக்கு வந்தார்கள். எனக்கு கிடைத்த வெற்றிக்குக் காரணம் நீங்கள் ஆசீர்வதித்துதந்த வேலல்லவா வெற்றிபெறச்செய்தது. ஆதலால் அந்த வெற்றிக்கு காரணமான தங்களை பூஜை வழிபாடு செய்து எனது நன்றியினை தெரிவிக்க தேவர்களுடன் வந்துள்ளேன். தாங்கள் தயவுசெய்து இந்த பூஜை வழிபாட்டினை ஏற்றருள வேண்டுகிறேன் என்று கூறினார்.

ஸ்ரீதேவி அதனைக்கேட்டு மிக்க மகிழ்ந்து உன்னைப்போல் தாய்தந்தையரை நன்றியுடனும் மரியாதையுடனும் காணும் குழந்தைகளைக் காண்பது அறிது. நீஞான குழந்தை உன்னை மகனாக பெற்றதற்கு பெருமகிழ்ச்சி அடைகிறேன். நீஎனக்கு அணிவித்து பூஜைசெய்யகூடிய புஷ்பம் மஞ்சள் குங்குமம் முதலியவற்றை நான் அணிய காரணமாக உள்ளவர் உனது தந்தையாகிய சிவபெருமானல்லவா மேலும் அவருக்கு மிக விருப்பமானது பூஜை எண்ணிலாஆகமம் இயம்பிய இறைவர் தாம்விரும்பும் உண்மையாவது பூசனையென திருமுறைகள் கூறுகிறதல்லவா ஆகையால் நீ செய்யவிரும்பிய பூஜையை நாம் எல்லோரும் சேர்ந்து சிவபெருமானுக்கு பூஜைசெய்வோம் என்று தேவி கூறினாள்.

இப்போது தேவர்கள் முருகனுடன் தேவி பூஜா சாமான்களுடன் சிவபெருமான் வீற்றிருக்கும் கயிலாயமலையை நோக்கி புறப்பட்டாள். தேவர்கள் நமசிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க! இமைபொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க! என்ற கோஷத்தோடு யாவரும் கயிலாயம் சென்று அதிகாரநந்தியின் அனுமதியுடன் சென்று இறைவனை ஸேவிக்க தேவி என்ன விசேஷம் முருகன் தேவர்களுடன் வந்துள்ளாய். என்று கேட்க இறைவா தேவர்கள் முருகனை பூஜை செய்ய கந்தகிரிக்கு செல்ல முருகன் பூஜையை எனக்குதான் செய்யவேண்னுமென்றுக்கூறி தேவர்களுடன் சிந்தாமணிக்ரஹம் வந்து என்னிடம் கூறிட நான் தங்களைத்தான் பூஜிக்கவேண்டுமென்று கூறி இவ்விடம் அழைத்து வந்தேன் தயவுசெய்து பூஜை செய்திட அனுமதி தர வேண்டுகிறேன். என்று வணங்கி கேட்டிட வேண்ட முழுவதும் தருபவனான

இறைவன் தேவி நீ என்பக்கதில் வந்து உட்கார் முருகா நீயும் எங்கள் மத்தியில் வந்துஇரு என்று கூறி தேவர்களை நோக்கி நீங்கள் பூஜையை துவங்குங்கள். என்று உத்தரவுஇட தேவர்கள் முறையாக பூஜை வழிபாடுகளை சிறப்பாக செய்து முடிவில் வணங்கி எழுந்த போது நீங்கள்வேண்டும் வரம் யாது எனக்கேட்க தேவர்கள் மிக்க மகிழ்ச்சியுடன் நாங்கள் விரும்பியது ஒன்று ஆனால் இப்போது எங்களுக்கு கிடைத்தது மூன்று இதைவிட என்னபேறு உள்ளது. சத்தாகிய தாங்களும், சித்தாகிய தேவியும், ஆனந்தமாகிய முருகனும், சேர்திருக்கும் காட்சி சச்சிதானந்தமாக எங்களுக்கு கிடைத்துள்ளது. இந்த காட்சி எப்போதும். எங்களுக்கு நிறந்தரமாக கிடைத்துக்கொண்டிருக்க அருள்பாலிக்கவேண்டுமென கேட்டுக்கொள்கிறோம். என்று கூறிட அன்றுமுதல் இறைவன் சோமாஸ்கந்தராக காட்சி தருவதை சிவாகமம் (பஞ்சவிம்சதி பேரானாம் சோமாஸ்கந்த விசேஷத:) இறைவனின் இருபத்ததைந்து வடிவங்களில் சோமாஸ்கந்த வடிவம் சிறப்பு என்றும் ஆகையால் ஆலயங்களில் இறைவன் சோமாஸ்கந்த வடிவத்தில் காட்சித்தருவதை நாம் தெரிசிக்கிறோம்.

1.நங்கடம் பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருகரக் கோயிலான் (திருநாவுக்கரசர்)

சோமாஸ்கந்தர் தியானம் (சிவாகமம்)
தக்ஷாலம்பித வாம நித்ருதபதம் கிருஷ்ணம் மிருகஞ்சாபயம்
டங்கஞ்சாததம் வரஞ்சகடகம் பிப்ராணகம் வாமகே
வாமேலம்பித நித்ருதான்ய பததம் தேவ்யாயுதம் மத்யத:
ஸ்கந்தே நாப்ஜகரத்வேயேன ஸஹிதம் ஸோமாகுஹேசம்பஜே –

**சோமாஸ் கந்தர் வரலாறு சம்பூர்ணம்**



# பிரதோஷ வழிபாடும் சோமசூத்ர பிரதக்ஷணமும்



சிவபெருமானை எப்பொழதும் வழிபாடு செய்யவேண்டுமென்றாலும் புண்ணிய விரத தினங்களில் வழிபடுவது மிகுந்த புண்ணிய பலன்களை தருவதுடன் பாப நீக்கமும் தர வல்லது. சோமவாரம், சிவராத்திரி, பிரதோஷம், முதலிய புண்ணிய தினங்களில் வழிபட்டு விரதம் இருப்பது சிறந்த பலனைத்தரும்.

கிருஷ்ணபகவான் பிரதோஷ விரதமிருந்து சாம்பன் என்ற புத்திரனை அடைந்ததாக புராணங்கள் கூறுகின்றன.

முன்னொரு காலத்தில் தேவர்கள் எல்லோரும் ஒன்றுகூடி அரக்கர்களால் ஏற்படும் துன்பங்கள் நீங்கி வாழ்ந்திட வேண்டி பிரம்மதேவருடன் காக்கும் கடவுளான திருமாலிடம் சென்று சாவா மூவா, நலம்பெற்று வாழ வழி அருளுமாறு வேண்டினார்கள். திருமால்தேவர்களை நோக்கி பாற்கடலை கடைந்து அமிர்தம் பெற்று உண்டால் மரணமில்லாமல் சந்ததமும் இளமையுடன், வாழலாம் என்று கூறினார். தேவர்கள் அரக்கர்களை கூட்டுசேர்த்துக்கொண்டு மந்தரமலையை மத்தாகவும், வாசுகி என்ற பாம்பை கயிறாகக் கொண்டு பாற்கடலை கடையத்தொடங்கினார்கள். அன்றையதினம் தசமிதிதி கடையும்போது மந்திரமலை பாற்கடலில் அமிழத்தொடங்கியது திருமால் ஆதிகூர்மமாக வந்து மலையை மேலே தூக்கி தந்தார். மறுதினம் ஏகாதசி தினம் தொடர்ந்து கடையும்போது வாசுகி வருத்தம் தாங்காமல் நஞ்சை கக்கியது. அப்போது கடலிலிருந்து ஒரு நஞ்சு உண்டாயிற்று. இரண்டு நஞ்சுக்களும் சேர்ந்து ஆலாலமாக பயங்கர வெப்பத்துடன் வெளிவந்துள்ளது. ஆலாலத்தால் உலகமே அழியும் நிலை ஏற்பட்டது. அதை அடக்கசென்ற திருமால் நீல நிறமானார். அமிருதம் வேண்டியவர்களை ஆலாலம் தொல்லைபடுத்தியது.

தேவர்களை ஆலாலம் துரத்த இடமாகவும், வலமாகவும் ஓடினார்கள், எல்லோரும் கயிலைக்கு சென்றார்கள். அங்கு வாயிற்காவலராக உள்ள அதிகாரநந்தியம்பெருமானை வணங்கி ஆலாலம் தோன்றியதையும், தங்களுக்கு ஏற்பட்டுள்ள துன்பத்தை கூறிட நந்தியம்பெருமான் ஸ்ரீசிவபெருமானிடம் அழைத்து சென்றிட அனைவரும் வணங்கி ஆலாலம் தோன்றியதையும் தங்களுக்கு எற்பட்டுள்ள துன்பத்தையும் கூறி தங்களையும் உலகத்தையும் காக்க வேண்டினார்கள்.

தேவர்கள் முறையீட்டிற்கு இறங்கிய கருணையே வடிவான சிவபெருமான் தம்அணுக்கத் தொண்டராகிய சுந்தரரை அழைத்து அவ்விடத்தை இவ்விடம் கொண்டுவா என பணித்தார். வானவர்களும் அணுகமுடியாத அக்கொடியவிடத்தை (பாற்கடலில் பரவிநின்ற ஆலாலத்தை) தன் கையால் ஒரு நாவல்கனிப்போன்று திரட்டிக்கொணர்ந்து சிவபெருமானிடம் சுந்தரர் தந்தார். அன்று முதல் சுந்தரர் ஆலால சுந்தரர் என்று அழைக்கப்பட்டார்.

எல்லா உயிர்களும் துன்பம் நீங்கி இன்புறு வண்ணம் சிவபெருமான் அவ்வாலல நஞ்சை அமிர்தம்போல் கண்டத்தில் அடக்கி அருளினன். இதனை திருஞான சம்பந்தர் உண்டாய் நஞ்சை உலகமுய்யவே என்று பாடியுள்ளார்.

நஞ்சை உண்டால் உள்முகத்திலுள்ள ஆருயிர்களும் உமிழ்ந்தால்வெளிமுகத்தில் உள்ள ஆருயிர்களும் அழிந்துவிடும். ஆதலால் உண்ணாமலும் உமிழாமலும் கண்ட(கழத்து) த்தில் அடக்கியதால் சிவந்த மேனியுடைய எம்பெருமானுடைய கண்டம் கொடிய நஞ்சின் விளைவாக நீலமாகஆயிற்று ஆதனால் நீலகண்டர் என்ற பெயர் பெற்றார். இவ்வாறு தேவர்கள் பொருட்டு சிவபெருமான் ஆலாலவிஷம் உண்டருளியது ஏகாதசி மாலை நேரமாகும். ஆலாலத்தின் துன்பம் நீங்கப்பெற்ற தேவர்களும், மற்றவர்களும், இறைவனை துதித்து வணங்கினார்கள். பாற்கடலை மீண்டும் கடைந்து எழும் அமிர்தத்தை உண்ணுமாறு சிவபெருமான் கட்டளையிட்டார். தொடர்ந்து ஏகாதசியன்று இரவு முன்போல கடலை கடைய தொடங்கினார். பாற்கடலிலிருந்து ஐராவதம் என்ற வெள்ளை யானை கற்பகதரு (கற்பக விருக்ஷம்) காமதேனு என்ற தெய்வீக பசு போன்ற சிறந்த பல பொருட்கள் வந்தன.தேவர்கள் பெற்றார்கள். இலக்குமி பாற்கடலிலிருந்து தோன்ற திருமால் ஏற்றுக்கொண்டார்.

மறுநாள் துவாதசி அன்று அதிகாலை அமிர்தம் தோன்றியது. தேவர்கள் அதனை பகிர்ந்துன்டார்கள். அமிர்தம் உண்டதால் அமரர்கள் ஆனார்கள்.(மர,மரண அமர,மரணமில்லாவாழ்வு) அமிர்தம் உண்ட தேவர்கள் மகிழ்ச்சியால் துவாதசியன்று ஆடியும் பாடியும் இருந்தார்கள். அடுத்தநாள் திரயோதசி(பதிமூன்றாம் நாள்) அமிர்தம் உண்ட மகிழ்ச்சியால் சிவபெருமானை வணங்க மறந்தனர். குற்றத்தை உணர்ந்த தேவர்கள் சிவபெருமானிடம் சென்று தாங்கள் செய்துள்ள குற்றத்தினை மன்னித்தருள வேண்டினார்கள்.

கருணாமூர்த்தியாண சிவபெருமான் தேவர்களுக்கு அருள்புரிய திருவுள்ளங்கொண்டு கயிலையில் அன்று மாலை பிரதோஷ வேளையில் (மாலை 4-30மணிமுதல் 6-மணிவரை) தம்திருமுன் உள்ள நந்திதேவரின் இருகொம்புகளுக்கு இடையில் நின்று அம்பிகைக்காண ஆனந்த நடனம் செய்தருளினார். அதனை சிவாகமம் ஸந்தியா நிருத்தம் என்றும் சரஸ்வதி தன் கையில் வீணைஇசைத்தும், இந்திரன் புல்லாங்குழல் வாசித்தும், பிரம்மதேவன் தாளம் போட்டும். இலக்குமி தேவி பாடல் இசைத்தும், திருமால் மிருதங்கம் வாசித்தும், நடனமாட பார்வதிதேவியின் பதியாகிய சிவபெருமானை பிரதோஷவேளையில் தேவர்கள் பக்தியுடன் தரிசித்தார்கள்.தேவர்கள் சிவபெருமானிடம் அய்யனே இந்தத்திருநடன காட்சியினை ஒவ்வொரு

திரயோதசி மாலையில் (பிரதோஷ காலத்தில்) தரிசிக்க அருள் பாலிக்க வேண்டும். என்று வேண்டிட வேண்ட முழவதும் தருபவனான சிவபெருமான் அதன்படி அருள் செய்தார்.

அன்று முதல் ஒவ்வொரு திரயோதசி மாலை 4-30 மணிமுதல் 6-மணிவரை பிரதோஷ வழிபாடு ஏற்பட்டது.

வாக்தேவி த்ருத வல்லசதமகோ வேணும்ததத்பத்மஜ:
தாலோன்னிதாகரோ ரமாபகவதி தோயப்ராயோ காஞ்சிதா
விஷ்ணுஸாந்திர மிருதங்க வாதனபடுர் தேவா ஸமஸ்தாஸ்திதா
ஸேவந்தோத மனுப்ரதோஷஸமயே தேவம் மிருடானீபதிம்

தோஷி என்ற சொல்லுக்கு மகிழ்ச்சி என்று பொருள்.

பிரதோஷ என்ற சொல்லுக்கு பெருமகிழ்ச்சி என்று பொருள்

பிரதோஷ காலத்தில் திருமால் ஆலயத்தில் வழிபாடு செய்வது கூடாது. சிவபெருமான் கண்டத்தில் இருக்கும் நஞ்சினைநந்தி எம்பெருமான் தன் நாவினால் நக்கி எடுத்துவிட எண்ணி நாவினால் நக்கிட நாக்கு நீலநிறமாயிற்று. நந்திக்கு நஞ்சினால் ஏற்படும் துன்பம் நீங்கிட காப்பரசி, அறுகு, முதலியவைகளை கொடுக்க இறைவன் தேவர்களுக்கு ஆக்ஞையிட்டார். காப்பரசி அறுகு முதலியவை விஷமுறிவை தரக்கூடியவை.

நந்திதேவர் தேவர்களைப் பார்த்து ஆலாலம் தோன்றிய போது எவ்வாறு ஓடினீர்கள். என்று வினவ தாங்கள் இடமாகவும், வலமாகவும், ஓட அது எங்களை துரத்தியதுஎன்றனர். அதுபோல ரிஷப தேவரிடமிருந்து இடமாக சண்டிகேஸ்வரர் வரையும், செல்ல பிறகு ரிஷபதேவரை வலமாக கோடுவரை சென்று திரும்ப இடமாக ரிஷப தேவரையும், பிறகு சண்டிகேஸ்வரரையும் மூன்று முறை வருதல். ஸோமசூத்திர பிரதட்சிணம் என்று சுயம்பு ஆகமம் கீழ்கண்டவாறு கூறுகிறது.

வ்ருஷம்சண்ட வ்ருஷம்சைவ ஸோமசூத்திரம் புனர்வ்ருஷம்
சண்டஞ்ச ஸோமசூத்ரஞ்ச புனச்சண்டம் புனர்வ்ருஷம்
ஏவம் ஸவ்யாப ஸவ்யந்து ப்ரதக்ஷிண மிஹோதிதம்.

இந்த பிரதக்ஷணம் பிரதோஷ நாளில் ப்ரதோஷ காலத்தில் மட்டும்தான். செய்யவேண்டும். மார்கழி மாதம் திருவாதிரை உற்சவம் பத்து தினங்கள் நீங்கலாகஎந்த காலத்திலும் திருமுறைகளை பாடிடலாகாது. திருவாதிரை பத்து தினங்கள் திருவெம்பாவை பாடல்கள்மட்டும் தான் பாடவேண்டும். என்பது சைவ மடங்களில் மரபாக இருந்து வருவது போல ஸவ்யாபஸவ்ய சோமசூத்திரதக்ஷணம் பிரதோஷத்தில் மட்டும் செய்யவும், மற்ற காலங்களில் ஸவ்ய பிரதக்ஷணம் மட்டும் செய்து வரவேணுமென சிவாகமம் கூறுகின்றது.

<u>பிரதோஷ வரலாறு சம்பூர்ணம்</u>



# உள்ளத்தில் உறையும் பெருமான்



குனித்த புருவமும், கொவ்வை செவ்வாயிற் குமின் சிரிப்பும் பனித்தசடையும் பவளம் போல் மேனியிற் பால்வெண்ணீறும் இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால் மனித்த பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.

எல்லாம் வல்ல இறைவன் அங்கிங்கெனாதபடி எங்கும் வியாபித்து உள்ளான். சிறப்பாக ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் உறைகின்றான்.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பாலயம்
வள்ளற் பிரானுக்கு வாய்க்கோபுர வாசல்
தெள்ள தெளிந்தார்க்கு ஜீவன் சிவலிங்கம்
கள்ள புலனைந்தும் காணாமனி விளக்கே. (திருமந்திரம்)

நமது சரீரமானது ஐந்து கோசங் (அறை) களையுடையது.
1.அன்னமயகோசம், 2. பிராணமயகோசம் 3. மநோமயகோசம் 4.விக்ஞானமயகோசயம், 5. ஆனந்தமய கோசம், என்று ஐந்து கோச ஸ்தானங்கள் அமைந்திருக்கிறது.
இந்த ஐந்தையும் நமது ஹ்ருதய (உள்ள) த்தில் ஸதா ஆடிக்கொண்டிருக்கிற இறைவனுக்கு ஐந்து சபைகளாக (அரங்கமாக) கூறப்படுகிறது.
அவையாவன:
1.அன்னமயகோசம் – இராஜசபை
2. பிராணமயகோசம் – தேவசபை
3. மநோமயகோசம் – நிருத்தசபை
4.விக்ஞானமயகோசம் – கனகசபை
5. ஆனந்தமய கோசம் – சிற்சபை
என ஐந்தாகும் மேலும் நமது சரீரமானது. மூன்று பாகங்களாக உள்ளது. 1.மூலகூடம் 2.தேவகூடம், 3.ரகசிய கூடம், எனப்படும். மூலகூடம் பிர்ம்ம மந்திரம் முதல் கழுத்துவரை உள்ளது. ஸ்ரீமத்வாக்பவகூடைகஸ்வரூப முகபங்கஜா என்று ஸ்ரீலலிதா சஹஸ்ரநாமம் கூறுகிறது.
2. தேவகூடம் (இதனை) மத்யகூடம் என்று கூறப்படுகிறது. கண்டாத கடிபர்யந்த மத்யகூட ஸ்வரூபிணி என்று கழுத்து முதல் இடுப்பு வரை உள்ளது.

3.ரகசியகூடம் (சக்தி கூடம்) இடுப்பிற்குகீழ்பாதம். வரையுள்ளது. இதனை சக்திகூடைகதாபன்ன கட்டியகதாபாகதாரிணி எனக்கூறப்படுகிறது.

இறைவனை அறிய சரியை, க்ரியை, யோகம், ஞானம், என நான்கு படிகள் சரியைக்ரியை யோகம் என்ற மூன்று படிகளையும் கடந்து ஞானத்தினால் தான் அறிய முடியும்.

உலோகங்களில் முடிவாகதங்குவது தங்கமாகும் பூலோக கைலாயமான சிதம்பரத்தில் இறைவன் தங்கியிருக்கும் இடத்தை (ஆலயத்தின்) மேல்கூரையை தங்க ஓடுகளால் அமைக்கப்பட்டு இருப்பதை காண்கிறோம். நாம் தினம் சுவாசிக்கும் மூச்சுகாற்றின் அளவான 21600 யே ஆலயத்தின் கூரையில் அமைக்கப்பட்டிருக்கும். தங்க ஓடுகளாகும்.

நமது சரீரத்தில் நாடிநரம்புகள் 72000-ம் தங்க ஓடுகளில் பதியவைத்திருக்கும் ஆணிகளாகும்.

நமது சரீரத்தில் ஆன்மீகசக்திகளை வெளிப்படுத்த இருக்கும் ஒன்பது துவாரங்களும், ஆலயத்தில் அருட்சக்தியை வெளிப்படுத்த ஒன்பது கலசங்களாக அமைந்துள்ளது.

நமது சரீரமானது பிருத்வி (மண்) 2.அப்பு (ஜலம்) 3. தேயு (அக்னி) 4.வாயு(காற்று) 5.ஆகாயம்(சப்தம்) என்ற ஐந்தோடு அமைந்துள்ளது. இறைவன் விசேஷமாக உறைகின்ற இடம் ஐந்தாகும். பிருத்வி (பிர்ம்ம பீடம் (காஞ்சி)

2. அப்புவிஷ்ணு பீடம் (திருவானைக்கா) 3.தேயு ருத்ரபீடம்(திருவண்ணாமலை) வாயு மகேஸ்வர பீடம் (காளத்தி 5. ஆகாயம் பீடம் (சிதம்பரமாகும்)

சிதம்பரத்தில் அமைந்துள்ள ஆலயத்தில் அமைந்துள்ள இந்த ஐந்து பீடங்களையும் பிர்ம்மபீடம் கனகசபையாகவும்

| | |
|---|---|
| 2. விஷ்ணு பீடம் | : வித்யை அவித்யை இரண்டும் இருகதவு 64 கலைகளும் 64 கைம்மரங்களாகும். |
| 3. ருத்ர பீடம் | : 28 ஆகமங்களும் 28 ஸ்தம்பங்களாக |
| 4. மஹேஸ்வர பீடம் | : ஆறு சாஸ்திரங்களும் ஆறு விட்டங்களாக |
| 5. ஸதாசிவ பீடம் | : நான்கு வேதங்களும், நான்கு ஸ்வர்ணஸ்தம் பஞ்சாக்ஷரம் ஐந்து படிகளாகவும். |
| பிரணவ பீடம் | : இதில் இறைவன் ஸகளவடிவாயும் நிஷ்கள வடிவாயும் ஸகளநிஷ்கள வடிவாயும், உள்ளான். |
| நமது சரீரத்தில் | : ரஜோகுணம் தமோகுணம் ஸத்வகுணம், என மூன்று குணங்கள் உள்ளன. |
| இறைவன் | : ஸகளத்திருமேனியான நடராஜ பெருமான் ஸகள |

நிஷ்கள திருமேனி கனக ஸபாபதி ஸ்படிகலிங்கம் நிஷ்கள- ரகஸியமாகும்.

நிஷ்கள மான ரகஸயம்: ஆறுசக்கரங்களையுடையது.

1. சிதம்பர சக்கரம், 2. ஸ்ரீசக்கரம்,

3. ஸம்மேளனசக்கரம், 4. மஹாதாண்டவசக்கரம்

5. திரஸ்கரணி சக்கரம், 6. ஆனந்த சக்கரம்.

நமது சரீரத்தில் : ஆறுசக்கரங்கள் 1. மூலாதாரம்,

2. சுவாதிஷ்டானம், 3. மணிபூரகம்,

4. அனாகதம் 5. விசுத்தி 6. ஆக்ஞாசக்கரம்,

ஆறும் ஆதாரசக்கரங்களும், உள்ளன.

ரகஸ்ய மானது : எல்லோராலும் அறியும்படியாகவுள்ளது. தங்கமயமான முத்தளமான வில்வ மாலைகளான நம்மிடமுள்ள தமோ குண ரஜோகுணஸத்வகுண மனோவாக்கு காயத்தை குறிப்பதாகும்.

ஸகள நிஷ்களமான ஸ்படிகலிங்கமானது நமது சூஷ்ம சரீரத்தில் உள்ள ஜீவனைக்குறிக்கும்.

ஸகளத்திருமேனியான ஸ்ரீநடராஜ பெருமான் நமது சரீரத்தைக் குறிப்பதாகும். நாம் ஸதாஉச்சரிக்கும் (தியானிக்கும் பஞ்சாக்ஷரமே திருமேனியாக உடையவர்.

சேர்க்கும் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் பார்க்கில் இறைக்கு
அங்கு நகரம் அடிகீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்.

<u>ஸ்ரீநடராஜ பெருமான் ஐந்தொழிலையும் தனது நடனத்தின் மூலம் செய்கிறார்.</u>

தோற்றம் துடியதினில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றிடும் அங்கியில் சங்காரம் உற்றமா
ஊன்று மலர்ப்பாதத்தில் உற்றதிரோம் முத்தி
நான்மலர்ப்பதத்தே நாடு.

ஓங்காரமே திருவாசியாகும் அதன் சுடரே அக்ஷரங்களாகும். ஓங்காரமே திருவாசி உற்றதனில் நீங்காத எழுத்தே நிறை சுடராம் ஆங்காரம் அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடல் இது பெற்றார் பிறப்பற்றார் பின்

சிதம்பர ஆலயத்தில் இருபக்கத்திலுமுள்ள உள்ளே செல்லும் வழி நமது சரீரத்தில் உள்ள உச்வாச நிச்வாசமான (இடைபிங்களை) என்ற நாசிதுவாரத்தை குறிக்கும். ஆலயத்தில் உள்ள பலகணி 96-ம், 96தத்துவங்களையும், நமது குண்டலினி சக்தியாகிய ஸர்ப்பத்தையே ஆபரணமாக பூண்டு தலையில் அணிந்துள்ள ஞானமாகிற சந்திரன் நமது மதி புத்தி. அறிவாகும். நமக்கு அவன்

அருளால் கிடைப்பது ஆனந்தமே அந்த ஆனந்தாம்ருதமான கங்கையை தலையில் அணிந்துகொண்டு நமக்கு இரவு பகலைத்தரும் சந்திர சூரியர்களை இருநேத்ரங்களாகவும், (நமதுஅக்ஞானத்தை போக்கி நல்ல ஞானத்தை தரும் அக்னி வடிவாயுள்ள நெற்றியுள்ள ஞானக்கண்ணையும்) வடமொழியான வேதசிவாகமங்களை தென்மொழியான தேவார திருவாசக திருமுறைகளை இரு குண்டலங்களாக (காதணி) கொண்டு வலது மேற்கரத்திலுள்ள டமருகம்(உடுக்கை) சிருஷ்டி (படைத்தலையும்) அதன் ஒலியிலிருந்து 14 வடமொழி சாஸ்திரங்கள்
1. இருக்கு 2. யஜுர், 3.ஸாம, 4.அதர்வம், 5.சிட்சை, 6.வியாகரணம், 7. சந்தஸ், 8.நிருத்தம், 9.ஜோதிடம், 10.கல்பம், 11.அர்தசாஸ்திரம், 12.ஆயுள் சாஸ்திரம், 13. காந்தர்வ சாஸ்திரம், 14. தனுர் சாஸ்திரம், ஆகிய 14 சாஸ்திரங்கள்.
தென்மொழி சித்தாந்த சாஸ்திரங்கள் 14
1.சிவஞான போதம், 2.சிவஞான சித்தியார், 3.சிவப்ரகாசம், 4.உண்மை விளக்கம், 5.போற்றிபஃறொடை, 6.வினாவெண்பா, 7.திருஅருட்பயன், 8.நெஞ்சுவிடு தூது, 9.கொடிக்கவி, 10.உண்மை நெறிவிளக்கம், 11. திருஉந்தியார், 12.திருக்களிற்று படியார், 13. இருபா இருபது, 14.சங்கற்ப நிராகரணம்.

உந்துகளிறு உயர் போதம் சித்தியார்
பிந்திருப்பா உண்மை பிரகாசம்
வந்த வரும் பண்பு வினா போற்றிப: ஹொடை
பாசமிலா நெஞ்சு விடு உண்மைநெறி சங்கற்பமுற்று. உண்டாகின்றன.
(வலது அபயஹஸ்தம் காத்தலையும்
இடதுமேற் கையில் உள்ள அக்னி
ஸம்ஹாரத்தையும் நமது பிறவிப்பிணியை அழித்தலும்)

நம்மிடமுள்ள காம க்ரோத லோப மோக மத மாத்ஸர்யம் ரூபமான முயலகனை தனது வலது பாதத்தால் திரோதனம் (மறைத்தல்) செய்து அடக்கி வைத்தலும் தூக்கிய திருவடியான குஞ்சித சரணத்தால் அனுக்ரஹம் திருவருளாலும் புரிய அருட்சக்தியான ஸ்ரீசிவகாமசுந்தரியை நோக்கும் பாவத்துதுடத்தோடு தில்லை மூவாயிறவர் என்ற தீக்ஷதர்கள் புடைசூழ பதஞ்சலி வியாக்ரபாதர் இருபுறமும் நின்று தெரிசிக்க பிர்மா தாளம்போட மஹாவிஷ்ணு சங்க வாத்யம் வாசிக்க சரஸ்வதி வீணாகானம் செய்ய சூரியனும் சந்திரனும் புல்லாங்குழல் வாசிக்க நந்தி பிருங்கியும், மத்தளம் வாசிக்க நாரதர் சங்கீத கானம் செய்ய முப்பத்து முக்கோடி தேவர்களும் சிவபக்தர்களும் கண்டு களிக்க சிற்சபையில் ஸ்ரீநடராஜபெருமான் ஆனந்ததாண்டவம் புரிந்துக்கொண்டிருப்பதை நமது சரீரத்தில் இடது மார்பில் ஸதா ஆடிக்கொண்டிருப்பதை நாம் அறிய கூடியதாகவுள்ளது.

**உள்ளத்தில் உறையும் பெருமான் சம்பூர்ணம்**



உ

ஸ்ரீ செல்வகணபதி துணை.

# புனித நீராடுதல்



எல்லா உயிர்களும் விரும்புவது இன்பமே! ஆனால் கிடைபபதோ துன்பம கலந்த இன்பமே. அதற்கு செய்யும் வினைகளே காரணமாகின்றன. அவரவர் வினைவழி அவரவர் வந்தனர். என்கிறார் ஸ்ரீகுருஞானசம்பந்தர். மிக அரிதான மானிடப்பிறவியை அடைந்திட பல பிறவிகளை எடுத்து வந்துள்ளதைப் புல்லாகி பூடாகி.....எல்லா பிறப்பும் பிறந்திளைத்தேன் என்கிறார். மாணிக்கப்வாசகபெருமான் ஒவ்வொரு பிறவியிலும் சேர்ந்துள்ள வினைகளை (அழுக்கை) போக்கிட புனித தீர்த்த ஸ்நானம்(நீராடுதல்) உதவுகிறது. அகத்திலும், புறத்திலும் சேர்ந்துள்ள அழுக்குகளை புண்ணிய தீர்த்த ஸ்நானத்தால் போக்கிக்கொள்ளவேண்டும். என்பதை மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய் வழிப்பட்டோர்க்கு வார்த்தைச் சொல்ல சற்குருவும் வாய்க்கும் என்று தாயுமான சுவாமிகள் கூறுகிறார்.

முறைப்படி ஸ்நானம் செய்வது எப்படி என்றால் முதலில் சங்கல்பம் செய்துக்கொள்ள வேண்டும். ஆசமனம் செய்து சுக்லாம் பரதம் விஷ்ணும்........சாந்தயே மமோா பாக்தஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஸ்ரீபரமேஸ்வரப்ரீத்யர்த்தம் மமஸஹ குடும்ப ஸ்ய ஸகலதோஷ நிவாரனார்த்தம் ஸமஸ்தபாப நிவாரனார்தம்........காவேரி தீர்த்தே பிராத ஸ்நான மஹம்கரிஷ்யே

பிறகு காவல் தெய்வமான ஷேத்ரபால பைரவரை தியானித்து பிரார்த்திக்கவேண்டும்.

அதிக்ரூர மஹாகாய கல்பாந்த தஹனோபம

பைரவாய நமஸ்துப்யம் அனுக்ஞாம் தேஹிமே ப்ரபோ

என்றுகூறிக் கும்பிட்டு ஸகல புண்ணிய தீர்த்தங்களையும் நாம் ஸ்நானம் செய்யஇருக்கும் தீர்த்தத்தில் ஆவாகனம் செய்துக் கொள்ளவேண்டும்.

கங்கேச யமுனேசைவ கோதாவரி சரஸ்வதி

நர்மதே ஸிந்து காவேரி தீர்த்தேஸ்மின் ஸந்நிதிம் குரு.

கங்கா கோதாவரி, புண்யா புவனத்ரய பாவிநீ தாம்ரபர்ணீ ஸ்வர்ணமுகீ குசாவதி, சரஸ்வதி, வசிஷ்டா கௌசிகீ, கோடி நர்மதா கண்டகீசுபா, மணிமுக்தா பினாகீச, சந்திரபாகா, ஹிமாலயா, கௌதமீ காச்யபீ, கம்பா நைமிசி மலநாசினீ, பாபநாசி புண்யராசி, காவேரி ஸாகரகாமினீ கிருஷ்ணவேணீ, மஹாபுண்யாதுங்கபத்ராச பல்குனி லவணாத்யா ஸாகராச்ச புண்யா நத்யானி யானிச ஜலே ஆகச்ச ஸுப்ரீதா சுத்திம் குர்வந்து ஸர்வதா என்று ஆவாகனம் செய்துக்கொள்ள வேண்டும்.

பிறகு அக்மர்ஷணசூக்தத்தையோ, காயத்ரி மந்திரத்தையோ ஓங்காரமாகியப்ரணவத்தையோ, கூறிக்கொண்டு நதிகளில் அபிமுக (எதிர்நோக்கி) மாகவும், குளத்தில் கிழக்கு நோக்கியும், ஸ்நானம் செய்யவேண்டும்.

நாம் ஸ்நானம் செய்யும் போது நமது சரீரத்திலுள்ள அழுக்கு தீர்த்தத்தில் கலப்பதினால் ஏற்படும் அபசாரத்தை பொறுத்து கொள்ளவேண்டி ஜலத்தின் அதிதேவதையான யஷ்மாவை குறித்து

யந்மயா தூஷிதம் தோயம்
சரீரமலஸஞ்சயாத்
தத்தோஷ பரிஹாரார்த்தம்
யக்ஷ்மாணம் தர்ப்பயாம்யஹம்:

என்று கூறி மூன்று முறை இருகைகளாலும் தீர்த்தத்தை எடுத்து விடவேண்டும். பிறகு ஸ்நானம் செய்து விட்டு கரையில் பின்புறம் தலையை குனிந்தபடி சில விநாடிகள் மௌனமாக நிற்க வேண்டும். அப்போது தலையில்இருந்து விழும் நீரினால் பித்ருக்களும் உடல் மத்தியிலிருந்து வழியும் ஜலத்தினால் கந்தர்வர்கள் முதலியவர்களும், மற்ற பகுதிகளிலிருந்து சிந்தும் ஜலத்தினால் மற்ற ஜந்துகளும் திருப்தி அடைகிறார்கள். என்பதாக சாஸ்திரம் கூறுகிறது. பிறகுமேல் வஸ்திரத்தை நான்காக மடித்து கீழ்கண்ட மந்திரத்தை கூறி பிழியவேண்டும்.

யோக சாஸ்மத்குலே ஜாதா :
அபுத்ரா கோத்ரிணா ம்ருதா :
தேக்ரஹண்நந்து மயாதத்தம்
வஸ்திர நிஷ்பீட னோதகம்.

என்று கூறிசெய்வதினால் அவரவர்கள் குலத்தில் புத்ரன்இல்லாமல்கால கதியடைந்துள்ள பித்ருக்களை திருப்தி செய்விக்கப்படுகிறது.

பொதுவாக தினமும் அதிகாலை 4 மணிமுதல் 6 மணிக்குள் நீராடுவதே சிறந்ததாகும். அப்போது நீர்நிலைகளில் உடலுக்கு நன்மைதரும். பிராணவாயு நிரம்பி இருப்பதாக ஆயுர்வேதம் கூறுகின்றது. நான்கு மணிமுதல் ஆறு மணிவரை பிராதக்காலம் பிராம்ஹமூர்த்தம் என அழைக்கப்படும் புனித நேரமாகும். இந்த நேரத்தில் நீராடியவர்கள் ஆரோக்கியமாக வாழ்ந்து வந்தார்கள். மேலும் இந்நேரத்தில் நீராடியே பழங்காலத்தில் ஆன்றோர்கள் ரிஷிபதவியை அடைந்துள்ளார்கள்.

ரிஷிணாம் ரிஷிதா நித்யம்
ப்ராத ஸ்நாநாத் நஸம்சய :

என்று பராசரஸ்மிருதி கூறுகின்றது.

ஸ்நானம் பலவகைப்படும். தண்ணீரில் ஸ்நானம் செய்வதை வாருண ஸ்நானம் என்றும் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஓதி உடல் முழுவதும் விபூதியை

பூசிக்கொள்வதை ஆக்னேயஸ்நானம், என்றும் காற்றில் பசுவின் பாததூளி நம்மேல் பட்டால் வாயவீய ஸ்நானம் என்றும் மந்திர ஜபங்கள் செய்த தீர்த்தத்தினால் ஸ்நானம் செய்வதை மந்திர ஸ்நானம் என்றும் வெய்யலுடன் கூடிய மழையில் நனைந்தால் திவ்ய ஸ்நானம் என்றும் தலையைத் தவிர மற்ற பகுதிகள் மட்டும் நனையும்படி குளிப்பதை கௌணஸ்நானம் என்றும் ஈரத்துணியால் உடல் முழுவதும் படும்படி தேய்த்துதுடைத்துக் கொள்வதை காபில ஸ்நானம் என்று பராசரஸ்மிருதி கூறுகின்றது.

கௌணஸ்நானம் காபில ஸ்நானம், இரண்டும் உடல்நிலை இயலாமல் உள்ள நேரங்களில் மட்டுமே செய்துகொள்ள வேண்டும்.

தினசரி காலையில் செய்யும் ஸ்நானத்தை நித்ய ஸ்நானம் என்றும் தீட்டு அனாசாரம், க்ரஹணம், போன்ற காலங்களில் செய்யப்படும் ஸ்நானத்தை நைமித்திக ஸ்நானம் என்றும் புத்ரப்ராப்தி முதலிய பயன்கருதி கங்கை சமுத்ரம் சங்கமுகம் போன்ற இடங்களில் செய்யும் ஸ்நானத்திற்கு க்ாம்ய ஸ்நானம் என்றும் பூஜை சிறார்த்தம் முதலிய கர்மாக்களுக்காக செய்வதை கிரியாஸ் நானம் என்றும் தைலம் எண்ணெய், மூலிகை சாறு, இவற்றால் செய்துகொள்ளும் ஸ்நானத்தை மலகர்ஷணஸ்நானம் என்றும் புண்ணிய தீர்த்தங்கள் செய்யப்படும் ஸ்நானத்தை க்ரியாஸ்நானம் என்று தர்ம சாஸ்திரங்கள் கூறுகின்றன.

நாம் எந்த ஒரு செயலையும், செய்வதற்குத்தகுதியை ஸ்நானந்தான் தருகிறது. ஆகவேதான் (ஸ்நான மூலாக்ரியா ஸர்வா) என்று சாஸ்திரம் கூறுகின்றது.

சரீர அசத்தத்தினால் எந்த ஸ்நானமும் செய்ய இயலாத பொழுது சிறிது நேரம் வடக்கு முகமாகவோ, கிழக்கு முகமாகவோ, அமர்ந்து பகவானை தியானித்து தன்னை பரிசித்தம் ஆக்கிகொள்ளலாம். இதற்கு மானஸ ஸ்நானம் என்கிறார் யாக்ஜவல்கயா.

இராமேஸ்வரம் திருச்செந்தூர் சமுத்திரத்திலும் கங்கை (பிரயாகை) சங்கமத்திலும் காவேரி ஸங்கமத்திலும் எப்போதும் ஸ்நானம் செய்யலாம்.

இரவில் இரண்டாவது மூன்றாவது ஜாமத்தில் ஸ்நானம் செய்யக்கூடாது.

சந்திர, சூரிய கிரஹண காலங்களில் மட்டும் எந்த ஜாமத்திலும் ஸ்நானம் செய்யலாம்.

ரோகிகளான ஆண்களுக்கு ஸ்நானம் அவசியமாகும்.போது மற்றொருவர் அந்த ரோகியை தொட்டுத்தொட்டு பத்துதடவை முழகவேண்டும். ஒவ்வொரு தடவையாலும் அந்த ரோகி வேறு உலர்ந்த வஸ்திரத்தை அணியவேண்டும். பிறகு பஞ்சகவ்ய ப்ரோக்ஷணம் பிராசனத்தால் சுத்தமாம்.

மாதவிலக்கான ஸ்தீரிகள் ஸ்நானம் செய்ய முடியாத நேரத்தில் மற்றொரு ஸ்தீரீயை பத்துதடவை தொட்டுதொட்டு முழுகவேண்டும். அந்த ஸ்திரீ ஒவ்வொருதடவையும் உலர்ந்த வஸ்திரங்களை மாற்றிக்கொள்ளவும். பஞ்சகவ்ய பிராசனம் புரோக்ஷணத்தால் சுத்தியாகிறாள். தேவபித்ரு கர்மாக்களுக்கு தகுதி அடைகிறாள் என்று பீமஸம்ஹிதை கூறுகிறது.

ஆனிமாதம் கார்த்திகை மாதம் மாசிமாதம் வைகாசி மாதம் இந்த நான்கு மாதங்களில் பூர்ணிமை காலையில் ஸ்நானம் செய்து சந்திரனைத்தெரிசித்தால் விசேஷபுண்ணிய பலன் கிடைக்கும். இதற்கு ஆகாமாவை என்று பெயர்.

நரகசதுர்தசி (தீபாவளி) யைத் தவிர ஏனைய காலங்களில் அதிகாலையில் எண்ணெய் ஸ்நானம் செய்யக்கூடாது.

கங்கையில் மூன்று தினங்கள் தங்கி ஸ்நானம் செய்யவும் யமுனை நதியில் ஐந்து தினங்கள் தங்கி ஸ்நானம் செய்தால்தான் பலன்கிடைக்கும் காவேரி ஸ்நானம் ஒருமுறை செய்தலே அந்த பலன் கிடைக்க செய்யும் என்பதை

திருராத்ரம் ஜாஹ்னவீ தோயம்
பாஞ்சராத்ரந்து யாமுனே
ஸத்ய புனாது காவேரி
பாபம் ஆமரணாந்தகம்

நாம்எல்லா நலங்களுடன் பல்லாண்டு வாழ்ந்துவர நல்ல புண்ணிய தீர்த்தஸ்நான பலன் உதவி செய்யும் என்பதை அறிவோமாக.

<u>புனித நீராடுதல் சம்பூர்ணம்</u>



## நவக்ரஹ வழிபாடும் ஹோமமும்



ஸகலஜீவராசிகளும் விரும்புவது இன்பமே ஆனால் கிடைப்பதோ துன்பம் கலந்த இன்பம் காரணம்? செய்யும் நல்வினை தீவினையே காரணமாகும். நல்வினை செய்தவர்களுக்கு இன்பமும் தீவினைசெய்தவருக்கு துன்பமும் தர இறைவனால் அமைக்கபெற்ற வர்களே நவக்ரஹங்களாகும். ஒருவருடைய ஜாதகம் (HORESCOPE) முற்பிறவியின் பிராகர்ஸ் ரிப்போர்ட் ஆகும். நல்வினை செய்தவர்களுக்கு மகிழ்ச்சியான பயனையும், தீவினை செய்தவர்களுக்கு திருத்தி நல்வழிப்படுத்திடவே மிக கடுமையான பயனையும் கொடுத்து வருவதை அறிய தருவது ஜோதிட நூலாகும்.

ஒரு நாட்டின் அதிபதிகளாகவுள்ளவர். ஜனாதிபதி எல்லா அண்டங்களுக்கும் புவனங்களுக்கும், அதிபதியாக இருப்பவர் சிவபெருமான் அவரது அருளாசிப்பெற்று செயல்படுபவர்களே நவக்ரஹங்களாகும். ஜனாதிபதியின் ஆக்ஞையை செயல்படுத்துபவர்களே காவல்துறையினராகும். அவர்களை அமைத்ததின் நோக்கம் நல்லவர்களுக்கு பாதுகாப்பு கொடுக்கவும், தீயவர்களை தண்டித்து திருத்தவுமே ஆகும்.

நவக்ரஹஙங்கள் நாம் செய்துள்ள நல்வினையை தீவினைக்கொப்ப சுக துக்கங்களைக் கொடுத்து நல்வழி படுத்துகிறார்கள்.என்பதை ஞானக் குழந்தையான திருஞான சம்பந்தசுவாமிகள், அருளிசெய்த கோளறு பதிகத்தில் வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன் மிகநல்ல வீணை தடவி மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்து என் உளமே புகுந்த அதனால் ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி பாம்பிரண்டுடன் ஆசறு நல்ல அல்ல அவை நல்லநல்ல அடியார் அவர்க்கு மிகவே என்று அடியவர்களுக்கு நல்லவர் என்றும் அல்லாதவர்களுக்கு கடுமையானவர் என்பதை கூறுகிறார்.

ஏழாம் நூற்றாண்டிற்க்கு முன்பே நவக்ரஹ வழிபாடு இருந்து வந்திருக்கிறது. என்பதை அறிய முடிகிறது. மேலும் ஆராய்சியாளர்களால் காலநிர்ணயம் செய்ய முடியாததாயும், சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்டதாக கூறப்படும். வேதங்கள் சிவாகமங்களாகும். வேதங்கள் ருக்கு, யஜூர், சாமம், அதர்வணம், என நான்கு பகுதிகளாகவுள்ளது. இதில் யஜூர் வேதத்தில்வுள்ள தைத்திரிய சாகையார் சூரிய நமஸ்கார மந்திரங்களும் நவக்ரஹங்கள் ஒன்பதிற்கும் உரிய வேதமந்திரங்களும் உள்ளன. இருபத்தியேழு நட்சத்திரங்களுக்கும் உரிய வேத மந்திரங்களும் உள்ளன. சிவாகமங்கள் இருபத்தியெட்டில் ஒன்றான காரணாகமம் பூர்வபாகத்தில் (பக்கம் 320 சுலோகம் 15முதல் சௌரார்ச்சனவிதி படலத்தில்.

அங்கந்யாஸ கரந்யாஸம் பூதசுத்திம் விசேஷத:
அந்தர்யஜன மாச்ருத்யாபி அர்க்கஸ்தாபன மாரபேது.
நிருருததௌ தண்டிணம் பூஜ்ய பிங்களம் வாயு கோணகே
கணேசமீச தேசேது பாவகே குருபூஜனம்
மத்யே ப்ரபூதகம் ஸ்தாப்ய பத்ரபுஷ்பாணியோஜயேது
விமலம் ஸாரமாராத்ய ததாபரமகோணயோ :
மத்யே பத்மாஸனம் தத்ர சூரியம்ஸம்பூஜயேத்தக:
உஷாஞ்ச ப்ரத்யுஷாம் பூஜ்ய தயோச்ச ஸ்வஸ்வநாமத :
தீப்தாச்ச சூஷ்மகாசைவ பத்ராச விஜயா ததா
அமோகா விமலாசைவ விபூதா வித்யுதந்த கா
ஸர்வதோ நாம மந்திரஞ்ச தளமத்யேது விந்யஸேது
பூர்வே ஸோமரூபஞ்ச தக்ஷிணே புத பூஜனம்
குரும்வை பச்சிமேபூஜ்ய ஸோமே சுக்ரம் ஸமர்ச்சயேது
அக்னாவங்காரகம் பூஜ்ய நிருருதௌசு சனைச்சரம்
ராஹுச்ச வாயுதேசேது கேதுஈசான கோசரே
ஸர்வோபசார ஸம்யுக்தம் தேஜச்சண்டம் அர்ச்சயேது.

ஆகமத்தின் ஒரு பகுதியாகிய சிற்ப சாஸ்திரம் சிவாலய மூலமூர்த்திக்கு எதிரில் தென்புறத்திலோ (அ) வலபுறத்திலோ சூரியன், சந்திரனை ஸ்தாபிக்க கூறியுள்ளதை இன்னும் பல பழைமையான பெரிய கோயிலில் காணமுடிகிறது.

ஆன்மார்த்தபரார்த்த பூஜைகளில் சூரியபூஜை செய்துதான் சிவபூஜை செய்ய வேணுமென்பதை காரணாகமம், நித்யார்ச்சனைவிதி படலத்தில் விநாசூர்யார்ச்சனம், கர்ம ததோ நிஷ்பலம் பவேது–என்கிறது.

நவகிரஹறங்கள் அமைக்கும் முறையை வீரதந்திராகமம்
ஆதித்ய மத்யமே ஸ்தாப்ய சுக்ரம் பூர்வேது விந்யஸேது
சந்திரம் ஆக்னேய திக்பாகே அங்காரகந்து தக்ஷிணே
ராஹுஞ்ச நைருதே ந்யஸேது வாருணேது சனைச்சரம்
கேதுஞ்ச வாயுதிக்பாகே உத்தரேது பிரஹஸ்பதிம்
ஈசாந்யாஞ்ச புதஞ்சைவ விந்யஸேத் தேசிகோத்தம :

சூரியனை மத்யிலேயும், கிழக்கே சுக்ரனையும், தென்கிழக்கில் சந்திரனையும், தெற்கில் அங்காரகனையும், தென்மேற்கில் ராகுவையும், மேற்கில் சனனச்சரனையும், வடமேற்கில் கேதுவையும், வடக்கில் குருவையும், வடகிழக்கில் புதனையும், ஸ்தாபனம் செய்து நவக்ரஹறங்களை பூஜிக்க வீரதந்திராகமம் கூறுகிறது. இதை நவக்ரஹமண்டலம் என்று கூறப்படுகின்றது.

காரணாகமம்

பூர்வே ஸோம ரூபஞ்ச தக்ஷிணெ புத பூஜனம்
குரும்பச்சிமேபூஜ்ய ஸோமேசுக்ரம் சமர்ச்சயேது
அக்னாவங்காரகம்பூஜ்ய நிருருதெளச சனைச்சரம்
ராஹுச்சவாயு தேசேது கேது ஈசான கோசரே

இது சூரிய மண்டலமென்றும் இந்த முறையில் அமைந்தது சூரியனார்கோயில்.

நவகிரஹக ஹோமத்திற்குரிய சமித்து தானியம் அன்னம் முதலியன.

| கிரஹம் | சமித்து | தானியம் | அன்னம் | வஸ்திரம் |
|---|---|---|---|---|
| சூரியன் | எருக்கு | கோதுமை | கோதுமைபாயஸம் | சிகப்பு |
| சந்திரன் | பொரசுசமித்து | அரிசி | பால் சாதம் | வெள்ளை |
| செவ்வாய் | கருங்காலி | துவரை | து.பருப்புசாதம் | சிகப்பு |
| புதன் | நாயுருவி | பயறு | பொங்கல் | பச்சை |
| குரு | அரசு | கொகடலை | எ.பழ.சாதம் | மஞ்சள் |
| சுக்ரன் | அத்தி | மொச்சை | தயிர்சாதம் | வெள்ளை |
| சனி | வன்னி | எள்ளு | எள்ளுசாதம் | கருப்பு |
| ராகு | அறுகு | உளுந்து | உளுந்துசாதம் | நீலம் |
| கேது | தெர்பை | கொள்ளு | தேங்காய்சாதம் | (பல வண்ணம் கலர்) |

| கிரஹம் | முகம் | தேசம் | இராகம் | ரத்னம் |
|---|---|---|---|---|
| சூரியன் | கிழக்கு | காளிங்கம்(ஓரிஸ்ஸா) | சௌராஷ்டா | மாணிக்கம் |
| சந்திரன் | மேற்கு | யாமுனதேசம்(உ.பி) | அசாவேரி | முத்து |
| செவ்வாய் | தெற்கு | அவந்திதேசம் (ம.பி) | சுருட்டி | பவழம் |
| புதன் | கிழக்கு | மகததேசம்(பீஹார்) | நாட்டைகுருச்சி | பச்சை மரகதம் |
| குரு | வடக்கு | ஸிந்துதேசம்(பஞ்சாப்) | அடானா | புஷ்பராகம். |
| சுக்ரன் | கிழக்கு | காம்போஜம்(அஸாம்) | பரஸ் | வைரம் |
| சனி | மேற்கு | ஸௌராஷ்டம்(குஜராத்) | யதுகுலகாம்போதி | நீலம் |
| ராகு | தெற்கு | பர்பரதேசம்(கயா) | ராமபிரியா | கோமேதகம் |
| கேது | தெற்கு | அந்தர்வேதி (தமிழ்நாடு) | சண்முகபிரியா | வைடூரியம். |

நவக்கிரஹ வரலாறு சம்பூர்ணம்



உ

ஸ்ரீ செல்வகணபதி துணை.

# பன்னிரெண்டுநாராயண ஸ்லோகம்



1. ஸ்ரீகேசவ நமஸ்தேஸ்து பரபிரும்ம ஸ்வரூபினே
சுபம்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
2. நாராயண நமஸ்தேஸ்து புருஷோத்தம வல்லப
புத்ராந்தேஹி தனந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
3. ஸ்ரீமாதவ நமஸ்தேஸ்து பக்தானுக்ரஹ காரக
யோகந்தேஹி தவந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
4. ஸ்ரீகோவிந்த நமஸ்தேஸ்து ஸர்வதேவ ஸ்வரூபினே
அச்வஞ்ச கோகுலந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
5. மஹாவிஷ்ணு நமஸ்தேஸ்து ஸர்வவ்யாபி ஜனார்தன
தனந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
6. மதுஸூதன நமஸ்தேஸ்து பக்தானுக்ரஹ காரக
வீர்யந்தேஹி பலந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
7. த்ரிவிக்ரம நமஸ்தேஸ்து ஸர்வாந்தர்யாமினேப்ரபோ
ப்ரஞ்ஞாந்தேஹி சீரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
8. வாமநாய நமஸ்தேஸ்து பக்த வத்ஸலதாயக
தராந்தேஹி தனந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
9. ஸ்ரீ தராய நமஸ்தேஸ்து ஸர்வகார்ய ஜயப்ரதே
ஜயந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே

10. ஹ்ருஷிகேச நமஸ்தேஸ்து பக்தபாலன தத்பர
யசோதேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
11. பத்மநாப நமஸ்தேஸ்து லோகானுக்ரஹ காரக
பக்திந்தேஹி ச்ரியந் தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
12. தாமோதர நமஸ்தேஸ்து ஸாவைச்வர்ய ப்ரதாயக
மோக்ஷந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே



## ஷோடச லக்ஷ்மி ஸ்தோத்திரம்



1. ஆதிலக்ஷ்மி நமஸ்தேஸ்து பரபிர்ம்ம ஸ்வரூபினி
சுபந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
2. சந்தானலக்ஷ்மி நமஸ்தேஸ்து புத்ரபௌத்ர பிரதாயினி
புத்ராந்தேஹி தனந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
3 கீர்த்திலக்ஷ்மி நமஸ்தேஸ்து விஷ்ணு வக்ஷஸ்தலஸ்திதே
யசோதேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
4. வித்யாலக்ஷ்மி நமஸ்தேஸ்து பிரம்ஹ வித்யாஸ்வரூபினி
வித்யாந்தேஹி கலாந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
5. தனலக்ஷ்மி நமஸ்தேஸ்து ஸர்வதாரித்ரிய நாசினி
தனந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
6. தான்யலக்ஷ்மி நமஸ்தேஸ்து ஸர்வாபரண பூஷிதே
தான்யந்தேஹி தனந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
7. மேதாலக்ஷ்மி நமஸ்தேஸ்து கலிகல்ம விநாசினி
பிரஞ்ஜாந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
8. ௨ஜலக்ஷ்மி நமஸ்தேஸ்து ஸர்வதேவ ஸ்வரூபினி
அச்வஞ்ச கோகுலந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
9. வீரலக்ஷ்மி நமஸ்தேஸ்து பராசக்தி ஸ்வரூபிணி
வீர்யந்தேஹி பலந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
10. ஜயலக்ஷ்மி நமஸ்தேஸ்து ஸர்வ கார்ய ஜயப்ரதே
ஜயந்தேஹி சுபந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
11. பாக்கியலக்ஷ்மி நமஸ்தேஸ்து ஸௌமங்கல்ய விவத்தினி
பாக்யந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே

12. ஆரோக்யலக்ஷ்மி நமஸ்தேஸ்து ஸர்வரோக நிவாரிணி
ஆயிர்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
13. ஸித்திலக்ஷ்மி நமஸ்தேஸ்து ஸர்வஸித்தி பிரதாயினி
ஸித்திந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
14. ஸௌந்தர்யலக்ஷ்மி நமஸ்தேஸ்து ஸர்வாலங்கார சோபிதே
ரூபந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
15. ஸாம்ராஜ்யலக்ஷ்மி நமஸ்தேஸ்து புத்திமுக்திபிரதாயினி
மோக்ஷந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே
16. மஹாலக்ஷ்மி நமஸ்தேஸ்து நாராயண மனோகரி
ஸர்வஸம்பத் பிரதாந்தேஹி ஸர்வ காமாம்ச்ச தேஹிமே



ஸ்ரீவிஷ்ணு ஸ்லோகம் சம்பூர்ணம்



## தருணி

பெண்களின் இரண்டாவது பருவம் தருணி பருவம் இதனை ( தருணி தாபஸாராத்யா) என்கிறது பிரும்மாண்ட புராணத்தில் உள்ள ஸ்ரீலலிதோபாக்யானம்.

ஸ்ரீதேவி மூன்று காரணத்திற்காக தவக்கோலத்தில் தவத்திலிருந்தாள்.

1. உலகத்தில் உள்ள ஸகலஜீவராசிகளின் நன்மைக்காக தவம் செய்தாள்
2. தனக்கு மனதிற்கு உகந்த கணவனை வேண்டி தவம் செய்தாள்.
3.தனதுதொண்டர்களுக்காக தனது சகோதரனுக்காக தன் கணவனையும் ஒரே வடிவத்தில் காண தவம் செய்தாள்.

தருணி என்பவள் பத்துவயத்திற்கு மேல் பதினெட்டு வயதிற்குள் பட்டவளாகவும் அந்த காலத்தில் தபஸ்ஸை அனுஷ்டித்து வருபவளாக கூறுகிறது.

முன்னொரு காலத்தில் பகாசுரன் என்பவன் மிகுந்த கடுமையான தவம் செய்து பிரமனிடம் பலவரங்களைப்பெற்று தேவர்கள் முனிவர்கள் சாது ஜனங்களையும், மிக தொந்தரவும் பல இன்னல்களையும் செய்து மிக கொடுமைப்படுத்தி வந்தான். கஷ்டங்களை தாங்கமுடியாத தேவர்கள் முனிவர்கள் எல்லோரும் மஹாவிஷ்ணுவிடம் முறையிட்டு தங்களை காப்பாற்ற வேண்டுமெனக்கேட்டு வணங்கினார்கள். மஹாவிஷ்ணு அந்த பகாசுரன் மிகுந்த தவத்தின் மூலமாக பல அரிய வரங்களை பெற்றதுடன் தனக்கு பதினெட்டு வயதுள்ள திருமணமாகாத யுவதியான பெண்ணைத்தவிர வேறு யாராலும் மரணம் வரக்கூடாது. என்று கேட்டு வரம் பெற்றுள்ளான். அவனை வேறு யாரிடம் அழிக்க இயலாது. ஆகையால் நாம் எல்லோரும் சேர்ந்து மஹாமாயையான ஸ்ரீதேவியைகுறித்து பெரிய வேள்வி

செய்து அவளை வேண்டி அவளால்தான் அவனைஅழிக்க முடியும் என்று கூறி தேவர்கள், முனிவர்கள் எல்லோரும் ஒன்றுகூடி ஸ்ரீமஹாவிஷ்ணுவின்தலைமையில் வேள்விசெய்து வேண்டிட அதிலிருந்து ஸ்ரீ தேவி தோன்றி அவனை அழிக்க தாம் தவக்கோலம் பூண்டு தவத்திற்கு தயாரானாள். அந்த பகாசுரனை அழித்துள்ள தேவிதவம் மேற்கொண்ட இடமே இன்று முக்கடல் 1.வங்களாவிரி கடல். 2. இந்துமகா கடல் 3. அரபி கடல். மூன்று இணைந்த இடமே கன்னியாகுமரி என்று வழங்கி வருகிறது. இன்று அந்த இடத்தில் தேவி தவக்கோலத்தில் இருப்பதை பாரதியார்

நீலத்திரை கடல் ஒரத்திலே நின்று
நித்தம் தவம் செய்யும் குமரி என்பர்.

பிறகு இந்த பாரத புண்ணிய பூமியையும் மக்களையும் காப்பதற்காக நீலத்திரைக்கடல் ஒரத்திலே நின்று நித்தம் தவம் செய் குமரியாக தவக்கோலத்தில் அருள் பாலிக்கிறாள் ஸ்ரீகன்னியாகுமரி.

## கன்னியா குமரி தியானம்

ஏகாநநாம் த்விநயநாம் காருண்ய வதனாம்புஜாம்
தக்ஷஹஸ்தேது அக்ஷமாலாம் ஊருஹஸ்தந்து வாமத:
ஸர்வாலங்காரஸம்யுக்தாம் பக்தானுக்ரஹ காரீனீம்
ஸதாத்யான பரான்தேவி தியாயேத் கன்யா குமாரிகாம்

## கன்னியாகுமாரி தோத்திரம்

தேவி கன்யாகுமரி பராசக்தி தேவி கன்யாகுமாரி
தாவி வருகுதம்மா என்நெஞ்சம் உன்தாளினை நாடுதம்மா
நீலகடலோரம் கன்னிதாய் நின்று அருளபுரிவளே
உலகில் என் கண்கள் அம்மா நின்னையே நாடுதம்மா
இச்சையனைத்தும் தீர்ப்பவளே அம்மா இனிமைகளை சேர்ப்பவளே
மிச்ச துன்பங்கள்இல்லாமல் விரட்டும் சக்தி படைத்தவளே
எத்தனை பிறவிகள் எடுத்தாலும் எனக்கு தாயாய் இருப்பவளே
எத்தனை பிழைகள் நான் செய்தாலும் இனிதாய் பொறுப்பவளே!
தேவி கன்னியாகுமரி !!

தருணி வரலாறு சம்பூர்ணம்



# சுமங்கலி



உலகத்திலுள்ள எல்லா உயிரினங்களுக்கும் மகிழ்ச்சியான வாழ்வை தரச்செய்வதால் ஜகன்மாதாவான தேவியை (சுமங்கலி சுககரி) என்று வாக்தேவதைகள் பிரும்மாண்ட புராணத்தில் உள்ளஸ்ரீலலிதாசஹஸ்ர நாமத்தில் கூறியுள்ளது. அவளை (ஸ்ரீமாதா) என்றும் அழைத்துள்ளார்கள். அன்பிற்கு

இலக்கணமாக திகழ்பவள் தாய் நீதி சாஸ்திரம் ஸ்நேகமாதா என்று கூறுகிறது. இறைவன் பூவுலகத்தில் எப்பொழதும் இருக்கமுடியாது என்பதால் தாயை படைத்துள்ளான்.இதனையே அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்றும் தாயிற்சிறந்த கோயிலுமில்லை என்றும் கூறப்படுகின்றது. தாய் எளிமையாய் அன்பாக இருப்பாள். என்பதற்காக தேவி லலிதா திருபுரசுந்தரி என்ற பெயரை வைத்துக்கொண்டுதான் அவள் அருளை பெறுவதற்காக ஸ்ரீலலிதாசஹஸ்ர நாமம் லலிதாதிரிசதி, லலிதாபஞ்சரத்னம், லலிதாஅனுபூதி, முதலிய பல நூல்கள் நமக்கு கிடைத்திருக்கின்றது. அவளை உபாசித்து அருள் பெருவதற்கு ஸ்ரீஸௌபாக்கிய வித்யாபஞ்சதசி என்ற மஹாமந்திரம் உள்ளது. சுமங்கலி 18 வயது முதல் நாற்பத்திஐந்து வயத்திற்குட்பட்ட தோற்றமுடையவள். இவளை வணங்குபவர்களுக்கு மகிழ்ச்சியான ஆனந்தமயமான வாழ்க்கை தருவதுடன். நல்ல மழலைச்செல்வங்களையும் தந்து வாழ்க்கையை சுகமாக ஆக்குவதால் சுமங்கலி சுககரீ என்று லலிதா பாக்யானம் கூறுகின்றது. அவளை எல்லோரும் சென்று வணங்கி அருள் பெருவதற்காக கோயில் கொண்டுள்ள இடம் மயிலாடுதுறை திருவாரூர் சாலையில் பேரளத்திற்கு மேற்கே இரண்டு கல் தொலைவில் திருமீயச்சூர் என்ற தலத்தில் ஸ்ரீதேவி ஸ்ரீலலிதாம்பாள் என்ற பெயரோடு அமர்ந்த கோலத்தில் மந்தஹாஸத்துடன் ஸர்வாலங்கர பூஷிதையாக அருள் பாலித்து வருகிறாள்.



**சுமங்கலி வரலாறு சம்பூர்ணம்**



## அகோராஸ்திர மஹிமை

பரித்ராணாய ஸாதுநாம் விநாசாய சதுஷ்கிருதாம் தர்ம ஸம்ஸ்தாபனார்தாய ஸம்பவாமி யுகேயுகே என்பார் கிருஷ்ண பரமாத்மா.

எப்பொழுதெல்லாம் தர்மம் குறைந்து அதர்மம் மேலிடுகிறதோ அப்பொழுதெல்லாம் நான் அவதரித்து தர்மத்தை நிலைநாட்டுவேன் என்பார்.

சிவபெருமான் தர்மம் குறைந்து அதர்மத்தினால் ஏற்படும் இன்னல்களைப் போக்கி நல்லவர்களை காத்திடவும் தீயவர்களை அழித்திட தமது ஐந்து முகத்திலிருந்து ஐந்து அஸ்திரங்களை அருளிசெய்தார். ஈசானமுகத்திலிருந்து சிவாஸ்திரமும், கிழக்காவுள்ள தத்புருஷமுகத்திலிருந்து பாசுபதாஸ்திரத்தையும், தெற்காகவுள்ள அகோரமுகத்திலிருந்து அகோராஸ்திரத்தையும், வடக்காகவுள்ள வாமதேவ முகத்திலிருந்து பிரத்தியங்கிராஸ்திரத்தையும், மேற்காகவுள்ள சத்யோஜாதமுகத்திலிருந்து க்ஷுரிகாஸ்திரத்தையும் அருளிசெய்தார்.

இந்த ஐந்து அஸ்திரங்களையும் கும்பாபிஷேக கிரியைகளில் 1. மூர்த்தி ஹோமம், 2. திசாஹோமத்தில் ஹோமம் செய்ய காமிகாஆகமும் காரணாகமமும் கூறுகிறது. கும்பாபிஷேகத்தில் விசேஷஸந்தி முடிந்தவுடன் அகோரம் ஏகவிம்சதிவாரம் ஜபேத் அதாவது இருபத்தியொரு தடவை அகோராஸ்திரம் ஜபம் செய்ய கூறுகிறது. சிவாகமத்தில் பிராயச்சித்தவிதியில் பிராயசித்தமாக அகோராஸ்திர மந்திரம் ஆயிரம் தடவை ஜபம் ஹோமம் செய்ய கூறுகிறது.

அகோராஸ்திர ஜப ஹோமத்தில் ஸகலசத்ருபாதைகள் வியாதிகள், அதிவிருஷ்டி (அதிகமழை) அனாவிருஷ்டி மழையே இல்லாமல் காய்ந்து பஞ்சம் ஏற்படுவதை தடுத்து ஸுவிருஷ்டி காலத்தில் மழை பெய்து பயிர்கள் நன்றாக விளைய செய்ய சுபீக்ஷம் உண்டாக செய்யும்.மேலும் கல்வெட்டிலும் அகோராஸ்திர பூஜை ஹோமம் ஆர்ப்பாக்கம் கல்வெட்டு

தமிழ்நாட்டில் சோழர் ஆட்சி காலத்தில் பலமிக்க சிங்களநாட்டுப்படை இலங்கையிலிருந்து இராமேஸ்வரம் வழியாக ஊடுருவி சிவாலயங்களை அழித்து சோழநாட்டை முற்றுகையிட்டனர். சோழ மன்னர் தமது இராஜகுருவான சுவாமிதேவ சிவாச்சாரியாரிடம் தெரிவித்தபோது அவர் ஆர்பாக்கம் என்னுமிடத்தில் அகோரபூஜை ஜப ஹோமம் செய்தார் அதன் விளைவாக ஒருகாரணமுமின்றி சிங்களப்படை பல பிணிகளுடன் தமிழ்நாட்டிலிருந்து வெளியேறி இலங்கை சென்றுவிட்டது. இதற்கு நன்றிக்கடனாக சோழ மன்னன் இவ்விவரங்களை சிலாசாஸனமாகவைத்து தக்க சன்மானம் அளித்து போற்றினார்.

தொல்பொருள் ஆராய்ச்சி தொல்பொருள் ஆய்வுத்துறை நிபுணர் டாக்டர் திருநாகசாமி அவர்கள் சிவாச்சாரியார்களின் வரலாறு குறித்து உரிய ஆதாரங்களுடன் அரிய ஒரு கட்டுரையை தினமலர் தினசரி பத்திரிகையில் (17-5-1998) தேதி இதழில் எழுதினார். அந்த கட்டுரை கீழே தரப்படுகிறது.

கி.பி. 1172-ல் இரண்டாம் இராஜாதிராஜன் என்பவர் ஆண்டபொழுது நடந்தது இலங்கை அரசன் தமிழகத்தின் மீது படையெடுத்தான். அவனது படைத்தலைவன் ஜயத்ரததண்டநாயகன் அவன் தமிழகத்தில் வந்து இறங்கி மதுரை பாண்டியமன்னன் குலசேகரபாண்டியனைத் தோற்கடித்து சோழநாட்டில் நுழைந்தான். சோழ நாட்டு மக்கள் பீதியுற்றுக்கலங்கினர் போர் கடுமையாக இருந்ததால் சோழர்படை தோற்றுவிடுமோ என்ற பயம் கவ்விக்கொண்டது. அப்பொழுது காஞ்சிபுரத்துக் அருகில் சோழனுக்கு கீழ்படிந்துள்ள சோழசம்புராயன் என்பவன் அங்கிருந்த ராஜகுருவான சுவாமிதேவர் என்பவரை அணுகி சோழநாட்டிற்கு ஏற்பட்டுள்ள அபாயத்தை கூறினார்.

சுவாமித்தேவர் ஏதாவது ஜப ஹோமம் அர்ச்சனை செய்து சோழ நாட்டைக் காக்க வேண்டும் என்று எண்ணிக்கொண்டார். அவரும் நானும் இலங்கை படையெடுப்பை பற்றிக்கேள்விப்பட்டேன் அவர்கள் இராமேஸ்வரத்திற்குள் புகுந்து கோவில் சொத்தையெல்லாம் சூறையாடி பூஜைகளையும் நிறுத்தி சிவத்துரோஹம் செய்தனர். நான் அவர்கள் அழிய 48 நாட்கள் அகோரபூஜை இப்பொழுதே மேற்கொள்கிறேன் என்று கூறி அகோரபூஜை ஒரு மண்டலம் மேற்கொண்டார்.

இப்பூஜை முடிவதற்குள் சோழ சேனாதிபதி பல்லவராசனிடமிருந்து செய்தி வந்தது இலங்கைப்படை முறியடிக்கப்பட்டுவிட்டது ஜயத்ரததண்டநாயகன் மற்ற சேனத்தலைவர்கள் எலலோரும் போரில் அழிக்கப்பட்டனர். இலங்கைப்படை தமிழகத்தைவிட்டு சிதறி ஓடிவிட்டது என்று வந்த செய்தியோடு சம்புவராயர் சுவாமிதேவரிடம் ஓடிவந்தார். அவருக்கு ஆர்ப்பாக்கம் என்ற ஊரை நன்றிபெருக்கோடு கொடுத்தார் அதை அவர் அவ்வூர் கோயில் வழிப்பாட்டிற்காக வைத்தார் என்று அவ்வூரில் உள்ள கல்வெட்டு கூறுகிறது இது உண்மையில் நடைபெற்ற நிகழ்ச்சியாகும். இந்த சுவாமித்தேவர் என்பவர் வங்காளதேசத்திலிருந்து

வந்தவர் உமாபதி சிவாச்சாரியார் இவர் இயர்பெயர். இவர் தமிழகத்தில் தங்கி ராஜகுருவாகி சோழ நாட்டையே பெரும் ஆபத்திலிருந்து காப்பாற்றியிருக்கிறார். இவர்கள் போன்ற சிவாச்சாரியார்களைப் பற்றிய பலசெய்திகள் வரலாற்றில் கிடைக்கின்றன.

அகோரபூஜை ஜபம் ஹோமத்தினால் வேற்று நாட்டுபடைகளை தோல்வியடைய செய்து துரத்தியதை அறியமுடிகிறது. இப்பொழுது நடக்க இருக்கும் அகோராஸ்திர ஜப ஹோமங்கள் தற்காலம் மழையின்மையால் பயிர்கள் விளைவு குறைந்து சாமான் விலைகள் அதிகமாகியும் மக்கள் பல இன்னல்களுக்கு ஆளாகும் நிலைமையிலிருந்து காப்பாற்றிடவும் மக்களிடம் மனவேற்றுமை நீங்கி ஒற்றுமையாக வாழ்ந்துவர செய்யும். வான்முகில் வழாது பெய்து வலிவலம் சுரந்து அமைச்சர்கள் நீதிவழுவாது ஆட்சி செய்திடவும் எல்லா உயிரினங்களும் குறைவிலாது வாழ்ந்துவரவும் நான்கு வேத பாராயனங்களும் ஓங்கி நல்ல அகோராஸ்திர ஹோமத்தால் நாடு பூராவும் நீதி விளங்கி வரும் என்பது ஆன்றோர் வாக்காகும்.

<u>அகோராஸ்திர மகிமை சம்பூர்ணம்</u>

## <u>சண்டிகேஸ்வரர் வரலாறு</u>

உலகமானது மஹாபிரளய காலத்தில் எல்லாம் ஒடுங்கி சிவபெருமான் மட்டும் தனித்திருந்தார். தனிமை கசந்ததால் தன்கையில் உள்ள உடுக்கையை ஆட்டினார். அதிலிருந்து வந்த ஒலி அகார உகார மகாரவடிவமான பிரணவம் உண்டாயிற்று நாதரூபமான அகாரத்துடன் பிந்துருபமான ம் சேர்ந்து அம் என்று ஆகி அதிலிருந்து ஆதிசக்தி தோன்றினாள். அந்த ஆதிசக்தி மூலமாக உலகை படைக்க திருவுள்ளங்கொண்டார்பகவான், பகவான்என்ற சொல்லுக்கு எண்குணத்தான். எட்டுகுணங்களையுடையவன் என்று கூறப்படுகிறது.

| | | |
|---|---|---|
| 1. ஸர்வக்ஞத்வம் | - | முற்றுமுணர்ந்தவர் |
| 2. ஸர்வந்தர்யாமித்வம் | - | எங்கும் நீக்கமற நிறைந்தவர் |
| 3. அநந்த சக்தித்வம் | - | பேராற்றல் உடையவர். |
| 4.அனுப்த சக்தித்வம் | - | விருப்புவெறுப்பு அற்றவர். |
| 5. அநாதி போதத்வம் | - | ஆதிபிரளய காலத்தில் தனது உடுக்கையிலிருந்து நாதம் பிந்து பிரணவம், சொல், பொருள், முதலியவைகளைக் கொண்டு ஸகலகலா வித்தைகளை அருளியவர். |
| 6. பரிதிருப்தத்வம் | - | பேரானந்த முள்ளவர். |
| 7.ஸ்வதந்திரத்வம் | - | கட்டுபாடு அற்றவர். |
| 8.ஸர்வ போக்தரத்வம் | - | பேரருள் புரிபவர். |

ஆதிசக்தியுடன் பகவான் உலகை படைத்தார். என்பதைத்தான் திருவள்ளுவர் பெருந்தகை

அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. என்பார்.

இறைவன் உலகை படைக்க திருவுள்ளங்கொண்ட போது அந்த எண்ணம், இச்சாசக்தியாகவும், உலகம் எப்படி இருக்கவேண்டுமென்பது எண்ணியபோது அது ஞான சக்தியாகவும், அதை செயல்படுத்தும்போது கிரியாசக்தியாகவும், செயல்பட்டால் அந்த ஆதிசக்தி நாதமாகிற அ வும் பிந்து வாகிற ம் சேர்ந்து (அம்) ஆகி காலத்தை உருவாக்கியதால் அவளுக்கு அம்காளி (அங்காளி) என்ற பெயர் ஏற்பட்டது. அவள் உலகை படைக்க தர்மத்தை (இடபத்தை) ஆதாரமாக ஆஸனமாக வாகனமாகவும், ஞான வடிவமான திருசூலத்தையும் கொண்டு உலகை படைத்து வந்தாள். அவளுக்கு உறுதுணையாக உள்ளவர். பிரமதேவர்(ஸ்ருஷ்டிகர்த்ரி பிர்ம்மருபா என்கிறது.) வாக்தேவதைகளால் அருளிய லலிதா ஸஹஸ்ரநாமம் உலகை காக்க முற்பட்டபோது. துர்கை என்ற பெயரும்அவளுக்கு உறுதுணையாக செயல்படுகிறவள் திருமாலாகிய விஷ்ணுவும், அழிக்க முற்பட்டபோது காளி என்ற பெயரும் அவளுக்கு உறுதுணையாக செயல்படுகிறாள். ருத்ரனும் ஸம்ஹாரிணி ருத்திர ரூபா, என்றும் மறைப்பு செய்ய முற்பட்டபோது அவளுக்கு திரஸ்கரணி என்ற பெயரும் உறுதுணையாக செயல்படுபவர். மகேஸ்வரன் என்றும் இதனை திரோதானகரீஸ்வரி என்றும் உலகத்தவர்களுக்கு . அனுக்ரஹ செய்யமுற்பட்டபோது மனோன்மணி என்று அவளுக்கு உறுதுணையாக செயல்படுகிறாள். ஸதாசிவன் என்றும் இதனை ஸதாசிவா அனுக்ரஹா யென்று ஸ்ரீலலிதாசஹஸ்ர நாமம் கூறுகின்றது. இந்த தொழில் ஐந்தும் பதவிகளே!

1. பிரம்மபதம், 2. விஷ்ணுபதம், 3. ருத்ரபதம், 4. மகேஸ்சுவரபதம், 5.ஸதாசிவபதம், இதனையே திருநாவுக்கரசர் சுவாமிகள்,

நூறு கோடி பிரமர் நொந்தினார்.
ஆறு கோடி நாராயண ரங்கனே
ஏறு கங்கைமணலெண்ணில் இந்திரர்
ஈறி லாதவன் ஈசனொருவனே.

ஆகையால் எல்லாமே பதந்தான் (பதவிகள்) என்பதைத்தான்சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில்

அண்டர் பிரானும்தொண்டர் தமக்கு
அதிபனாக்கி அனைத்தும்நாம்
உண்டகலமும் உடுப்பனவும்
சூடுவனவும் உனக்காகச்
சண்டீசனுமாம் பதந்தந்தோம்
என்றங்கவர் பொற்றடமுடிக்கு
துண்ட மதி சேர்சடைக்கொன்றை
மாலை வாங்கி சூட்டினார்.

சண்டீசர் என்பதும் ஒரு பதம் என்பது தெளிவாகிறது.

முக்தி பேறு இருவகைப்படும்.

1. பரமுக்தி,

இது இறைவனோடு கலந்து விடுதல் இதனையே சிவஸாயுஜ்ஜியம் என்பர்.

2. பதமுக்தி,

இது ஸாலோக ஸாமீப ஸாரூபத்தை அடைந்தவர்களுக்கு அளிக்கும் முக்தியே பதமுக்தியாகும்.

<u>அஜிதாகமம் சர்யாபாதத்தில்</u>

ஸ்கந்த சண்ட கணாதீச பிதுர் பிதாமஹ ப்ரபிதாமஹான் என்று பிதுர்லோகத்தில் மிகுந்த புண்ணிய தவத்தின் பயனாக பிதுருகளுக்கு பதவிகள் தருவதாக கூறுகின்றது.

திருக்கைலாயத்தில் சிவபெருமானுக்கு அணுக்க தொண்டராக உள்ளஎட்டு பெயர்களில் சண்டீசர் ஒருவர். காச்யப சில்ப சாஸ்திரம் 9-ம் படலத்தில்

நான்குயுகங்களிலும் ஸத்யயுகமான க்ருதயுகத்தில்
ப்ரசண்டர் என்ற பெயரோடு விளங்கியதை
க்ருதயுகே பிரசண்டாக்ய : சுவேதவர்ண ஸமாயுத :
தோபிர் ஷோடபிர்யுக்த : வாஹநந்து கஜம்பவேது
சூல:பரசுவஜ்ர : கட்க கோசஸ்ததைவச

ஷுரீகாச அபயம் தண்ட: தக்ஷிணாஷ்டாயுதம் பவேது.
கேடகாடிண்டி பாலஞ்ச பாசம்கண்டாம் ததைவச
வரதம் வ்யாக்ய ஹஸ்தாறு சஸருசிம் நாகஞ்சவாமகே
ஜடாமகுடஸமாயுக்தம் ருத்ராக்ஷா பரணாந் வித :

திரேதாயாம்அஷ்டஹஸ்தந்து அதிரக்த ஸமப்ரபம்
விக்ராந்த சண்டநாம் நாதுஸீவீகீர்ன ஜடாந்விதம்
வாஹனந்து ஹயம் வித்யாது கிஞ்சித்ப்ரஹஸிதாநான
சூலம்பாசஞ்ச கட்கஞ்ச பரசும் தக்ஷிணேகரே
வரதம் கேடகம் பாலம் கண்டாம்வாமே த்ருடம் த்ருதம்.

துவாபரேது சதுர்பாஹு: பீதவர்ணசுகாஸந:
ஜடா மண்டல ஸம்யுக்தம் ஸதா சிந்தயேத்சிவம்.
தம்ஷ்டிராகராளவதந: டங்கம் சூலஞ்சதக்ஷிணே
பாசஞ்சாப்யங்குசம் வாமே பத்ர பீடோபரிஸ்திதம்

கலௌது த்விஜம் சாம்சம் ஜடாமகுட மண்டிதம்
ஜடா மகுட ஸம்யுக்தம் கெடிவந்த மதாந்விதம்
க்ருஷ்ணபம் வாத ரக்தாபம் ஸௌம்ய நேத்ராந்விதம் :
ஆபங்கம் சமபங்கம்வா ஸமபாதஸ்தா நகந்துவா

சிவபெருமானை பூஜித்தாலும், ஸேவித்தாலும்,அதன் பயனை தரும் பொறுப்பை பெற்றவர் சண்டிகேஸ்வரர்

ஸத்யயுகமான கிருதயுகத்தல் தருமதேவதை நான்கு பாதத்துடன் விளங்கி வந்தாள். பக்தர்களுக்கு சிவபூஜை , சிவதரிசன பலன்களை வாரிவழங்க 16கைகளுடன் பிரசண்டர் என்ற பெயருடன் விளங்கிவந்தார்.

திரேதாயுகத்தில் தருமதேவதை மூன்று பாதத்துடன் விளங்கி வந்ததால் சிவ பக்தர்களுக்கு சிவபூஜை , சிவதரிசன பலன்களை கொடுப்பதற்கு எட்டு கைகளுடன் விக்ராந்த சண்டர் என்ற பெயருடன் விளங்கிவந்தார்.

துவாபரயுகத்தில் தருமதேவதை இரண்டு பாதத்துடன் விளங்கி வந்ததால் சிவ பக்தர்களுக்கு சிவபூஜை , சிவதரிசன பலன்களை கொடுப்பதற்கு நான்கு கைகளுடன் விபுசண்டர் என்ற பெயருடன் விளங்கிவந்தார்.

கலியுகத்தில் தருமதேவதை ஒரே பாதத்துடன் விளங்கி வந்ததால் சிவ பக்தர்களுக்கு சிவபூஜை , சிவதரிசன பலன்களை கொடுப்பதற்கு இரண்டு கைகளுடன் த்வனி சண்டர் என்ற பெயருடன் விளங்கிவருகிறார்.

சிவாலய வழிபாட்டில் நிறைவாக சண்டிகேஸ்வரை வழிப்பட்டால்தான் சிவபூஜை சிவதரிசன பலன் கிடைக்கசெய்யும் என்று சிவாகமங்கள் கூறுகின்றன.

<u>சிவபெருமானை பூஜித்து ஸேவித்த பலனை</u>

நீலகண்ட பதாம் போஜபரஸ் புரிதமாநஸ

சம்போபூஜா ஸேவா பலந்தேஹி சண்டிகேசுவர நமோஸ்துதே

<u>தேவியை பூஜித்து ஸேவித்த பலனை</u>

பராசக்தி பதாம் போஜபரஸ் புரிதமாநஸ

தேவிபூஜா ஸேவா பலந்தேஹி சண்டேசுவரி நமோஸ்துதே

<u>விநாயகபெருமானைஸேவித்த பலனை</u>

விக்னராஜபதாம் போஜபரஸ் புரிதமாநஃ

கணேச ஸேவா பலந்தேஹி கும்பசண்ட நமோஸ்துதே

<u>முருகபெருமானை பூஜித்து ஸேவித்த பலனை</u>

சுப்ரமன்ய பதாம் போஜபரஸ் புரிதமாநஸ

ஸ்கந்த ஸேவா பலந்தேஹி சுமித்ரசண்ட நமோஸ்துதே

<u>சூரியனை பூஜித்து ஸேவித்த பலனை</u>

சிவசூர்ய பதாம் போஜபரஸ் புரிதமாநஸ

சூரிய பூஜா பலந்தேஹி தேஜச்சண்ட நமோஸ்துதே

கலியுகத்தில் தற்காலம் விளங்கி அருள்பாலித்து வரும்த்வனி(தொனி) சண்டிகேஸ்வரர் வரலாறு சைவத்திருமுறைகளில்7-ம் திருமுறையில் ஸ்ரீசுந்தரமூர்த்தி நாயனார் அவர்கள்அருளிய திருத்தொண்டர் தொகையில் மெய்மையே திருமேனி வழிபடா நிற்க வெகுண்டெழுந்த தாதைதா...

மழுவினால் எறிந்த அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக்கு அடியேன். என்று அருளியதை ஆதாரமாகக் கொண்டு நம்பியாண்டார் நம்பி 11-ந்திருமுறை திருத்தொண்டர் திருவந்தாதியால்

குலமேறிய சேய்ஞலூரிற்குரிசில் குறைகடல் சூழ்
தலமேறிய விறற்சண்டி கண்ணள்தந்தைதாள் இரண்டும்
வலமேறிய மழுவால் எறிந்தீசன் மணிமேல்
நலமேறிய பால்சொறிந்தலர் சூட்டிய நன்னிதியே

என்று பாடிஅருளியதையும், ஆதாரமாக கொண்டு திருசேக்கிழார் சுவாமிகளின் 12-ந்திருமுறையாகப்போற்றித் துதிக்கப்படும். பெரிய புராணத்தில் சண்டேஸ்வர நாயனாரின் அருள்வரலாறு சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இவர் பெரியபுராணம் சிறப்பிக்கும் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர். சோழவளநாட்டில் மண்ணியாற்றின் தென்கரையில் உள்ள சேய்ஞலூரில் வேதம்ஓதும் அந்தணர்கள் மிகுதியாக இருந்தனர். அதில் அந்தணர் மரபில் காசியபகோத்திரத்தை சேர்ந்த எச்சதத்தன் என்பவருக்கும் பவித்திரை என்ற மாதுவிற்கும் மகனாக விசாரசரும்ர் பிறந்தார். இவரே பின்னர் சண்டேஸ்வர நாயனார் என சிறப்புற்று விளங்கினார்.

இவர்தம் ஐந்தாம் வயதில் கலைகள் யாவும், கற்றுணர்ந்தார். ஏழாம்வயதில் உபநயநம் நடத்த பின்னர் வேதகல்வி பெறத்தொடங்கி அதில் சிறந்த புலமைப் பெற்றார். வாழ்வின் குறிக்கோள் சிவனடியைச்சிந்தித்துச் சிவனடியை சேரவேண்டும் என்று சிவவழிபாட்டில் மிக ஈடுபாடு கொண்டார்.

## ஆனிரை மேய்த்தல் :

ஒருநாள் ஆனிரை மேய்க்கும் இடையரோடு சென்ற கன்னீன்ற பசுஒன்று இடையனை முட்ட முற்பட்டபோது அதனையறிந்த இடையன்கோலினால் அதனை நையப்புடைத்தான். அதனைக்கண்ட விசாரசருமர் பசுவிடம் இரக்கம் கொண்டு இடையன் அதனை மேலும் அடிக்காத படி தடுத்தார். இறைவழிபாட்டிற்கு வேண்டிய பஞ்சகவ்யங்கள் அளித்தல்திருநீறுக்குறிய கோமயம் நல்குதல் தேவர்கள் முனிவர்கள் அனைவரும் அதன்உடலில் பல இடங்களிலும் இடம்பெற்றிருத்தல் முதலியவற்றால் பசுவின்பெருமையை உணர்ந்துவிசாரசருமர் தாமே அப்பசுக்களை மேய்க்கும் பொறுப்பேற்றார்.

## சிவ பூஜை செய்தல் :

விசாரசருமர் பசுக்களை மேய்த்து பராமரித்தமையால் அவைகள் யாவும் பொலிவுடன் விளங்கின மிகுதியாகவும், பாலினை சுரந்தளித்தன. பசுக்கள்யாவும் விசாரசருமரை கண்டபோது அன்புமிகுந்துகறவா முன்னரே பாலை பொழிந்தன. விசாரசருமர்அவை பொழிந்த பாலை கண்டபோது அதுகொண்டு இறைவனுக்குத்

திருமஞ்சனம்(அபிஷேகம்) செய்ய விரும்பினார். மண்ணியாற்றங்கரையிலிருந்த (திருவாப்பாடி) ஆத்தி மரநிழலில் மணலால் சிவலிங்கமும், கோயிலும் திருசுற்றுக்கோபுரமும் அமைத்தார். பசுக்கள் பொழிந்த பாலை குடங்களில் கொண்டும் அங்கிருந்த மலர்களை கொண்டும், பெருமானுக்கு அன்போடு அபிஷேகம் அர்ச்சனைகள் செய்து வழிப்பட்டார். வீட்டிற்குச் சென்ற பசுக்கள்அங்கும் குறையாமல் பாலை சுரந்து அளித்தன.

**<u>தந்தையினை தடிதல் :</u>**

விசாரசருமர் நாடென்றும் செய்யும் இவ்அபிஷேகத்தை ஏதிலான் ஒருவன் கண்டு அந்தணர்பாற் சென்று கூறினான். அதுகேட்ட அந்தணர் சினந்து எச்சதத்தனை அழைத்து அவனிடம் கூறி கடிந்தார். பிழை பொறுக்குமாறு வேண்டி கொண்டு சென்ற தந்தை மகன் செயலை நேரே காண விரும்பி மறைந்திருந்து அவன் அபிஷேகச்செயலில் மூழ்கி இருப்பதைக்கண்ணுற்றார். பாலை வீணாக்குகிறான் என்றே பிழை உணர்ந்த தந்தை சினங்கொண்டு அபிஷேகத்திற்காக இருந்த பாற்குடங்களை காலால் இடறி சிதைத்தார். இறைத்தொண்டிற்கு இடையூறு செய்த தந்தைபாற்கோபங்கொண்டு அங்கிருந்த கம்பினை எடுத்து அடிக்க ஓங்கியபோது அதுவே மழுவாய் மாறக்கண்டு அதனால் தம் தந்தையின் இருகால்களையும் எறிந்து துண்டித்தார். தந்தை இறந்தார். மைந்தரான விசாரசருமர் அதனை கருதாது இறைவழிபாட்டில் தொடர்ந்து ஈடுபட்டார்.

**<u>ஈசனின் அருட்காட்சி :</u>**

விசாரசருமரின் அன்புமிகு பூஜைக்கு உகந்த இறைவன் விடைமீது உமையோடு காட்சியளித்தார். இறைவன் தம்கரத்தால் விசாரசருமரை எடுத்து நம்பொருட்டால் தந்தையின் கால்களை தடிந்து இறக்கச்செய்தனை. ஆதலால் இனி நாமே உனக்கு அடுத்த தந்தையானோம். என்று அருள்புரிந்தார். சிவபெருமான் திருமலர்கைதீண்டபெற்றமையால் விசாரசருமர் அயன் முதல் அமரர்கள் அனைவரும் துதிசெயச்சூழ்ந்த ஒளியுற்று விளங்கினார்.

**<u>சண்டேஸபதம் அருளல் :</u>**

இறைவன் விசாரசருமரைத் தொண்டர்களுக்கு தலைவணாக்கி அனைத்தும் நாம் உண்டகலமும் உடுப்பனவும் சூடுவனவும், உனக்காகச் சண்டீசனுமாம் பதந்தந்தோம். என்று கூறி தம் முடியிலிருந்த கொன்றை மாலையினை எடுத்து சூட்டினார். விசாரசருமர் அன்று முதல் சண்டேசநாயனார் என்று போற்றப்பட்டார். இவர் சிறப்பினை சேக்கிழார் கூறுகையில் வந்து மிகைசெய்தானததாள் மழுவால் துணித்த மறைச்சிறுவர் அந்தஉடம்பு தன்னுடனே அரனார். மகனார் ஆயினார். (பெரியபுராணம் சண்டேசுவரர் புராணம்59) என்று குறிப்பிடுகிறார்.

## சிவாலயத்தில் சண்டேஸ்வர் வழிபாடு :

இறைவனால் சண்டீசப்பெரும்பதம் பெற்ற சிறப்பினால் ஒவ்வொரு சிவாலயத்திலும் கருவறையின் வடபால் தெற்குநோக்கி அமைக்கப்பட்ட சிறிய கோயிலொன்றில் சண்டேஸ்வர பெருமானின்திருமேனி அமைக்கப்பட்டு (பிரதிஷ்டை) வழிபடபட்டு வருகின்றது. சிவாலய வழிபாட்டின் பயன் சண்டீஸ்வரர் வழிபாட்டோடு நிறைவுறும் என்பது சைவமரபாகும்..

சிவாலயங்களில் அர்த்தஜாமம் பூஜை நிறைவில் ஈசனுக்கு உள்ள(நிர்மால்ய புஷ்பம், நைவேத்யம், வஸ்திரம்) அனைத்தும் இவருக்கு உரியதாக்கி அன்றைய தின பூஜையினை நிறைவு செய்வர்.

சணடீசர்பதம் அருளிய காட்சியினை கங்கைகொண்ட சோழபுரத்திலும் மதுரை சிவாலயத்திலும் காணலாம். சிவாலயத்தில் விளங்கும் சண்டேசுவர பெருமானை தொனிச்சண்டர் எனக்கூறுவர். தாம்எப்போதும் சிவத்தியான நிலையில் இருப்பதால் சிவாலயதரிசனத்தை முடித்து இறுதியில் அன்பர்கள் யாவரும் இவரது சன்னதியில் கரஒலியினை மெதுவாக எழுப்பி சிவதரிசன பலனைப்பெற பிராத்திக்கவேண்டுமென்பது மரபாகும்.





சண்டீஸ்வரர் வரலாறு சம்பூர்ணம்

# புவனமாதா மஹாகாளி

சைவசித்தாந்தம் இருநூத்தி இருபத்து நான்கு புவனங்கள் உள்ளதாக கூறுகிறது. அதில் நூத்தியெட்டு புவனங்களுக்கு அதிபதியாக விளங்கி வருபவர்கள் ஸ்ரீ பத்ரகாளியும் ஸ்ரீ வீரபத்திரரும் பிர்மாண்டத்தின் மேலிருந்து ஆட்சி செய்து வருவதாக சிவாகமம் கூறுகிறது.

## பத்ரகாளி வரலாறு

ஜெகன்மாதாவான பராசக்தி சிவபெருமானுக்கு நான்கு ரூபத்தில் செயல்படுகிறாள். அனுக்ரஹ சக்தியாக செயல்படும்போது பார்வதியாகவும், புருஷசக்தியாக செயல்படும்போது விஷ்ணுவாகவும் கோபசக்தியாக செயல்படும்போது காளியாகவும், வெற்றி (ஜய) சக்தியாக செயல்படும்போது துர்கையாகவும் செயல்படுகிறார்கள்.

போகே பவானி புருஷேஷு விஷ்ணு
கோபேச காளி சமரேஷு துர்கா

என்று லலிதோபாக்யானம் கூறுகிறது. மார்க்கண்டேய புராணத்தில் உள்ள தேவிமஹாத்மியம் ஒன்பது அசுரர்களை தேவி அழிக்கிறாள். அதில் ஒருவனான ரக்தபீஜன் என்ற அசுரன் தவம் செய்து வரம் பெற்றபோது தனது உடலிலிருந்து ஒரு சொட்டு இரத்தம் பூமியில் விழுந்தாலும் பூமியில் விழுந்தாலும் அதிலிருந்த பல அசுரர்கள் உண்டாக வரம் பெற்றுள்ளதால் அவனுடன் யுத்தம் செய்யும்போது தன் உடலிலிருந்து தனது கோபத்தை (உக்ரத்தை) ஒரு பெண்ணாக சிருஷ்டித்து அவளுக்கு கௌசிகி என்று பெயரிட்டு நான் ரக்தபீஜனுடன் யுத்தம் செய்யும்போது அவன் உடலிலிருந்து வெளியாகும் இரத்தத்தை கீழேவிழாமல் நீ உண்டு அவனை அழிக்க எனக்கு உதவுவாயாக என்ற கூறியதை தேவி மகாத்மியத்தில் காணலாம். அதன் பிறகு யுத்தம் முடிந்தவுடன் கௌசிகியை கிராமரட்சகியாக துஷ்டர்களை அழித்து சிஷ்டர் (நல்லவர்) களை காளியென்ற பெயரோடு காப்பாற்றி வருவாயாக என உத்திரவு இட்டாள்.

## காளி வழிபாடும், உபாஸகர்களும்.

காளியை வழிபடுதலே அனைத்து தெய்வ வழிபாடும் பிர்ம்மா, விஷ்ணு சிவோகௌரி லட்சுமி கணபதிரவி பூஜிதாஸகலாதேவி: காளிம் பூஜயேத்ஸதா. ஸகல தேவதாஸ்வரூபிணியான ஸ்ரீ காளிதேவியை வழிபடுவதினாலேயே எல்லா தெய்வங்களையும் வழிபட்ட பலன் கிடைக்குமென மந்திரமகோததி என்ற மந்திரசாஸ்திர நூல் கூறுகிறது.

## காளியை உபாஸித்தவர்கள்.

ஸ்ரீ காளியை உபாஸித்து பயன்பெற்றவர்கள் இருவகைப்படும்.

**1. தேவர்கள் (விண்ணுலகத்தவர்கள்)**

ஹனுமாம்ச்சைவ விக்னேசோ மகவா பார்க்கவஸ்ததா
கங்கா ஸ்ரீசூரிய சந்திரௌச ராவணோ யக்ஷநாயக:
வாயுகணே சோத குரு: சுக்ரோ பூமிச்சராகவ:
பிரஹ்லாத சுகதேவச்ச க்ஷேத்ரபாலஸ்ததை வச
ரதேஹ் யேகோனவிம்சா: ஸ்ரீகாள்யா தேவ்யா உபாஸகா:

1. ஹனுமான் 2. விக்னேசுவரர் 3. இந்திரன் 4. பரசுராமர் 5. கங்காதேவி 6. லட்சுமி 7. சூரியன் 8. சந்திரன் 9.இராவணன் 10. குபேரன் 11. குரு (வியாழ பகவான்) 12. வாயு 13. சுக்கிரன் 14. பூமிதேவி 15. இராகவன் (ராமர்) 16. பரதன் 17. பிரகலாதன் 18. சுகதேவர் 19. க்ஷேத்திரபாலன் பத்தொன்பது தேவர்கள் ஸ்ரீ காளியை உபாஸித்து பயன்பெற்றவர்கள் என்ற காளி கல்பதரு என்ற நூல் கூறுகிறது.

**2. மானிடர்கள் (மண்ணுலகத்தவர்கள்)**

1. காளிதாசன், 2. விக்ரமாதித்தன்,(அரசன்) 3. பட்டி (மந்திரி) 4. போஜராஜா 5. இராமகிருஷ்ண பரமஹம்சர் 6. விவேகாநந்தர், 7. சத்திரபதி சிவாஜி 8. சம்பந்தாண்டான் 9 மகாகவி பாரதியார் 10. மாவூர் சர்மா.

ஸ்ரீ காளியை (உபாசனை) பூஜிப்பவர்களுக்கு கிடைக்கும் பலன்.

ஆயிராரோக்யமைச்வர்யம்
பலம் புஷ்டி: மஹத்யச:
கவித்வம் புக்தி முக்தீச
காளிகாபத பூஜநாது.

ஸ்ரீ காளியின் பாதாரவிந்தங்களில் நல்ல மலரினால் பூஜை செய்வதனால் நீண்ட ஆயுள் ஆரோக்யம் ஐசுவரியம் பலம் புஷ்டி பெருங்கீர்த்தி கவிபுனையும் ஆற்றல் போக மோக்ஷம் முதலியன கிடைத்திட செய்யும்.

## ஸ்ரீ காளிதேவியின் விசேஷ ஆலயங்கள்உள்ளஇடங்கள்:

1. கல்கத்தா தக்ஷிணகாளி - இராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கு நேரில் காட்சிதந்தவள்
2. உஜ்ஜயினி மகாகாளி - விக்கிரமாதித்தனுக்கு அருள்புரிந்தவள்.
3. திருமலைராயன்பட்டினம் - ஆயிரங்காளி எப்பொழுதும் பெட்டியில் இருப்பவள்,

ஐந்து ஆண்டுக்கு ஒருமுறை எடுத்து பூஜைக்குரிய புஷ்பம் தேங்காய் பழம் வெற்றிலைப்பாக்கு நிவேதன பொருட்கள் எல்லாம் ஆயிரமாயிரமாக வைத்து பூஜிக்கும் சிறப்புடையது.

4. சிறுவாச்சியூர் மதுரகாளி

திங்கள் வெள்ளிக்கிழமையில் ஆலயம் திறந்து சிறப்பு வழிபாடுகள். பல குடும்பங்களுக்கு குலதெய்வமாக அருள்பாலிப்பவள்.

5. சிதம்பரம் தில்லைக்காளி

தில்லையில் நடராஜபெருமானோடு நடனம் ஆடியவள் இன்று பலகுடும்பங்களுக்கு குலதெய்வமாக விளங்கி வருகிறாள்.

6. மைசூர் சாமுண்டீசுவரகாளி

சண்ட முண்ட மகிஷாசுர போன்ற அசுரர்கள் வதம் செய்து மலைமேல் அமர்ந்து அருள்பாலித்து வருகிறாள்.

7. தேரமுந்தூர் கம்பர்மகாகாளி

கம்பர் இந்த காளியை உபாஸித்து இராமாயணம் காவியம் புனையும் ஆற்றல் பெற்று கவியரசர் ஆனார்.

8. திருச்சி வெக்காளியம்மன்

பலசோழ மன்னர்களுக்கு வெற்றி தந்து பலகவிஞர்களுக்கு அருள்தந்தவள். மேற்கூரையின்றி மழையும் வெயிலிலும் உள்ளாள்.

9. திருவெண்காடு ஆதிகாளி

ஆதிசிதம்பரம் என்ற பெயரோடு விளங்குவதோடு திருவெண்காட்டில் நடராஜபெருமானுக்கு சற்று மேற்கேயும் ஸ்ரீ அகோரமூர்த்திக்கு நேர் எதிர் புறத்தில் வடக்கு நோக்கி அமர்ந்த கோலத்தில் அருள்பாலிப்பவள் ஆதிகாளி.

10. காளையர்கோவில் சுவர்ணகாளி

மருதுசகோதரர்களுக்கு பலவெற்றிகளை தந்தும் வணங்கும் பக்தர்களுக்கு வேண்டும் பயன்களை அளிக்கும் அருட்சக்தியாக விளங்கி வருபவள்.

11. அம்பகரத்தூர் மகாகாளி

அம்பரன் என்ற அரக்கனை அழித்து மக்களை காத்ததால் அம்பகரத்தூர் என்ற பெயரோடு விளங்கி வரும் தலத்தில் வடக்கு நோக்கி அருள்பாலிப்பவள்.

12. தொட்டியம் மதுரகாளி

பலகுடும்பங்களுக்கு குலதெய்வமாய் விளங்கிவருவதுடன் திருவிழா காலத்தில் பெண்கள் பொங்கல் பானை வைத்து வழிபடும் காட்சி மிக அற்புதமானது.

13. சீர்காழி இரட்டைக்காளி

தில்லையில் நடராஜபெருமானுக்கு நடனம் ஆடி தோல்வியுற்றபிறகு சீர்காழி வந்து சிவபெருமானை பூஜித்து சீர்பெற்றதால் சிர்காளி மருவி சீர்காழி ஆயிற்று.

14. சென்னை ஸ்ரீ காளிகாம்பா சத்ரபதி சிவாஜி உபாஸித்து அருள் பெற்றது.

15. பாண்டி மகாகாளி

மஹாகவி பாரதியார் உபாஸித்து கவிபாடும் திறமைபெற்றது.

16. வக்ரகாளி

ஆலயத்திலிருந்து எல்லாமே வக்ரமாகிய பௌர்ணமியன்று இரவிலும், அமாவாசையன்று பகலிலும் விசேஷ பூஜை ஹோமங்கள் நடைபெறுகிறது.



**ஸ்ரீகாளி வரலாறு சம்பூர்ணம்**



# அருள்தரும் மதுரைவீரன் வரலாறு.

உலகநாயக தம்பதிகளான பார்வதிபரமேஸ்வராள் திருமணம் இமயமலையில் நடத்திட பூர்வாங்க ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கிற சமயம், திருமணத்தைக. கண்டு தரிசிக்க வேண்டி ஸகலஜீவ ராசிகளும் இமயமலை நோக்கி வந்தவண்ணம் இருந்ததால் வடகோடு தாழ்ந்தும், தென்கோடு உயர்ந்தும் காணப்பட்டதால் பூமி சமமாக இருக்க எல்லோரும் சிவபெருமானிடம் வேண்டினர்.

சிவபெருமான் மகாதபஸ்வியும், குள்ளவடிவராகவுள்ள அகஸ்தியரை நோக்கிநீங்கள் தென்பகுதிக்கு சென்று தங்கினால் பூமிசமநிலை அடைந்திடும் என்றிட அதனை ஏற்றுக்கொண்ட அகத்தியர் சற்று கண்கலங்கி நிற்பதைக்கண்ட சிவபெருமான் காரணம் என்ன என்று வினவினார். அகத்தியர் மகாபாக்யசாலிகள் நிறைந்த இந்த உலகத்தில் தங்கள் திருமணக் காட்சியை கண்டு தெரிசிக்க முடியாத ஒரு மகா பாபியும் உள்ளதை நினைந்து கண் கலங்கினேன் என்றிட பெருமான் தென்பகுதியில் உள்ள பொதிகை மலையில் சென்று தங்கிடவும் அங்கு எங்கள் திருமணக்காட்சியை தருகிறோம். என்று கூறி ஆசிவழங்கிட அகத்தியரும் தென்திசை நோக்கி புறப்பட்டு பலதலங்களையெல்லாம் தெரிசித்துக்கொண்டு பொதிகை மலையில் தங்கி தவம் செய்துகொண்டிருந்தார். பங்குனி உத்திர நன்னாளில் பார்வதி பரமேசுவராள் திருமணக்காட்சி அகத்தியருக்கு கிடைத்தது. அகத்தியரை நோக்கி சிவபெருமான் இப்போது மகிழ்ச்சியா என்று கேட்க தங்கள் திருமணக் கோலத்தை தெரிசிக்கும் பாக்கியம் கிடைத்தவரை மகிழ்ச்சியே ஆனால் நீங்கள் இருவரும் மாலைமாற்றி ஊஞ்சலாடி வைதீக சடங்குகள் நடத்தும் காட்சி அம்மா பார்வதிதேவியின் கழுத்தில் மாங்கல்யம் அணிவிக்கும் காட்சி ஸப்தபதி (ஏழுஅடி) அன்னை தேவியின் வலது கால் கடடைவிரலை தங்கள் கையால் பிடித்து ஏழுஅடி எடுத்துவைத்து மிஞ்சி (மெட்டி) அணிவிக்கும் காட்சியெல்லாம் காணும்பாக்யம் கிடைக்கவில்லையே என்றிட அகத்திய முனிவரே உங்கள் விருப்பத்திற்காக நாங்கள் மீண்டும் ஒருமுறை மதுரையில் திருமணம் செய்து அந்தக்காட்சியை பூரணமாய் தெரிசிக்கச்செய்கிறேன் என்றார்.

முன்பு வடக்கே இமயமலையில் பர்வதராஜன் மேனா தம்பதிகளின் தவத்திற்காக உமாதேவி மானஸரோவர் என்ற ஜல ஓடையில் தாமரை மலரில் தேவிபார்வதியாக தோன்றி திருமணம் நடைபெற்றது.

இனி துவாதசாந்த தலமான மதுரையில் மலையத்துவஜ பாண்டியர் காஞ்சனமாலா தம்பதிகளுக்கு எல்லா செல்வங்களும் நிறைந்திருந்தும் குழந்தைச்செல்வம் இல்லாத காரணத்தால் பெரியோர்கள் அறிவுரைப்படி புத்திரகாமேஷ்டி யாகம் அந்த அக்னியில் மூன்று வயது சிறுமியாக மூன்று தனங்களுடன் முக்கண்ணனான சிவபெருமானை முக்காலும் தியானித்தப்படி தோன்றினாள்.முன்பு சிவபெருமானை அடையவேண்டி பெருமானுக்கு விருப்பமான சிவபூஜையை காமாட்சியை இருந்து செய்துவந்தாள் இதனை சென்ற காலம், நிகழ்காலம், எதிர்காலத்தில் நடக்கும் பல அறிய விஷயங்களை நமக்கு எடுத்து தெளிவு படுத்த சிவபெருமானால் அருளிய சிவாகமம் பூஜயாவிபுலம், ராஜ்யம், அக்னி, கார்யா, மஹத்தனம் என்ற வாக்குப்ரகாரம் தேவிசிவபூஜை, செய்ததன் பயனாக பெரிய சாம்ராஜ்யத்திற்கே அதிபதியாக உள்ளார்.

தேவி மதுரையில் மீனாட்சியாக அவதரிக்க செல்லு முன் பெருமானிடம் ஒருவரம் கேட்டாள். தங்களை என்றும் பிரியாமலும் தங்களுக்கு மிக விருப்பமான பூஜையை செய்து வரவும்,
தங்களை எப்பொழுதும் மறவாதிருக்கவும் வரம் தருமாறுகேட்டாள். சிவபெருமான் தன்சக்தியை ஆத்மலிங்கமாக தேவியிடம் கொடுத்தார். தேவி அதனை தன் இதயத்துள் .
வைத்துள்ளதாலும் மார்பு ஆடையால் முடியிருப்பதாலும், இருதனங்களுக்கு மத்தியில் உள்ளதாலும் மற்றவர்கள் மூன்று தனங்களை உடையவள் என்று எண்ணினார்கள் அங்கையற்க்கண்ணியான மீனாட்சி தன் கணவனை நேரில் காணும்போது மூன்றாவது தனம் மறைந்துவிடும் என்று அசரீரி கூறியது பெருமான் நேரில் வரும்போது அவரது
(ஆன்மசக்தியாகிய) லிங்கம் அவருடன் கலந்து விடுவதால் மூன்றாவது தனம் கணவனைக்கண்டவுடன் மறைந்துவிடும் என அசரீரி கூறியது.

மதுரையில் கல்வியும் செல்வமும் வீரமும் சிறந்து விளங்கிட நல்லாட்சி செய்து வந்தாள் ஸ்ரீ மீனாட்சி தேவி. கலைமகளான சரஸ்வதி பலநற்புலவர்களைத் தோற்றுவித்து சங்கம் வளர்த்து பலதமிழ் இலக்கியங்களை அருளிசெய்தாள். செல்வத்திருமகளான இலக்குமி முத்துமுதலான ஸகல செல்வங்களிலும் சிறந்து விளங்கிடச்செய்தாள்.

வெற்றித்திருமகனான முருகபெருமான் அன்னையின் நல்லாட்சிக்கு எந்த இடையூறும் வராமல் பாதுகாத்து வந்தார். அவரை மக்கள் மதுரையில் சிறந்த வீரனாக நல்லாட்சிக்கு உதவி செய்து வருவதால் அவரை மதுரை வீரன் என்று மிக அன்புடன் வணங்கி போற்றி வழிபட்டுவருகிறார்கள். ஸ்ரீ முருகபெருமானின் அம்சமே மதுரைவீரன். தேவி காமாட்சி தவம்செய்தபோதும் முப்பத்திரெண்டு தர்மங்களை அனுஷ்டிக்க மகாமாயை (மகாமாரி) யாக இருந்தபோதும் முருகபெருமான்

காத்தவராயசுவாமியாக இருந்து வந்ததுபோலவே அன்னை மீனாட்சியின் நல்லாட்சிக்கு உறுதுணையாக விளங்கியவர் மதுரைவீரன்.

முருகபெருமானுடைய அம்சமான மதுரைவீரனுக்கு உற்றதுணையாக தேவஸேனா அம்சமான சுவேதநாயகி (வெள்ளையம்மா) என்ற பெயருடனும் வள்ளி பொம்மி என்ற பெயரோடும் அருள்பாலித்து வருவதை சிவாகமம் கூறுகிறது.

<u>மதுரைவீரன் தியான சுலோகம்.</u>

த்விபுதாஞ்ச த்ருபங்கச த்விஹஸ்தம் கட்க கேடகம்
கூரூர தம்ஷ்ட்ரம் மகா கோரம் பக்த கேசால கான்விதம்
ரக்தவர்ணம் விசாலாக்ஷம் மதுரைவீர பஜாம்யஹம்

<u>பொம்மி தியான சுலோகம்.</u>

ஈஷகுஞ்சித வாமாங்கிரீம் சவ்யே கஞ்சு பதாம்புஜாம்
ததான வாமஹஸ்தாப்ஜாம் சவ்யே லம்பக கரான்விதாம்
ஸ்தன கஞ்சுக ஸம்யுக்தாம் சியாமாம் பொம்மி பஜாம்யஹம்.

<u>வெள்ளையம்மா தியான சுலோகம்.</u>

கிஞ்சாகுஞ்சித சவ்யாங்கரீம் வாமே ருஜீபதாம்புஜாம்
நிலோத்பலதராம் தக்ஷேவாமே லம்பக கரான்விதாம்
ஸ்வேத வர்ணாம் விசாலாக்ஷிம் பஜாமி ஸ்வேதநாயகிம்.

<u>ஸ்ரீமதுரைவீரன் வரலாறு சம்பூர்ணம்</u>

## <u>அருள்தரும் இடும்பன் வரலாறு.</u>

உலக நன்மையை வேண்டி பரமேசுவரரின் உத்திரவுப்படி தென்திசை நோக்கி புறப்பட்ட மஹாதபஸ்வியான அகத்திய முனிவர் தாம் இருந்து தவம் செய்ய மலைவேணுமேயென்று தனது சீடனான இடும்பனிடம் கூற மிகுந்தபலசாலியும் குருபக்தியும் நிறைந்த இடும்பன் இமயமலையிலிருந்து இரண்டு மலைசிகரங்களை பெயர்த்து காவடிப் போலக்கட்டி தூக்கிக்கொண்டு தென்திசை நோக்கி வந்தான்.

இன்று ஆவினன்குடி (பழனி) என்று பிரபலமாக இருக்கும் இடம் அன்று சாதாரண இடமாக இருந்தது. அந்த இடத்திற்கு வந்தபோது சரீரஉபாதை காரணமாக சற்றுஓய்வு எடுத்துக்கொள்ள எண்ணி மலைகளை அவ்விடத்தில் உள்ள சண்முகநதி ஸமீபமாக வைத்துவிடடு ஜலஉபாதைகளை முடித்துக்கொண்டு பிறகு சென்று மலைகளை தூக்க முயன்றபொழுது தூக்க முடியவில்லை மலையைசுற்றியும் மேற்புறமும் பார்த்தான், மலைமேல் ஒரு சின்னப்பையன் நின்று கைதட்டி சிரித்துக்கொண்டிருந்தான். அவனைக்கண்டு கோபமுற்ற இடும்பன் அந்த பையனிடம் சண்டையிட எண்ணி ஒருசிறுகற்பாறையை தூக்கி எறிந்தான், அந்த பையன் விளையாட்டாக குச்சியை இடும்பன் மேல் எறிந்திட அவன் மூர்ச்சையாகி வீழ்ந்தான். உடன்வந்துள்ள இடும்பனின் மனைவி இடும்பி தன் கணவனின் குருவான அகத்தியரை நினைத்து தன் கணவனை பிழைக்கச்செய்ய வேண்டுமென வேண்டினாள். அருந்தவஞானியான அகத்தியர் தன் சீடனுக்கு ஏற்பட்டது

முருகபெருமானால் என்பதை அறிந்து அங்குவந்து முருகபெருமானை தோத்திரங்கள் பல செய்து தன் சீடன் செய்த பிழையை மன்னித்து அருளவேணுமென பிரார்த்தித்தார். கருணை கடலான முருகபெருமான் கருணையினால் இடும்பன் பிழைத்து எழுந்தான் தன்குருவைக்கண்டு வணங்கிட இடும்பனிடம் நீ இந்த மலைமேல் கண்ட சிறுவன் முருகபெருமானே அவர் இந்த மலைமேல் விரும்பிவந்து தங்கியதால் இநத மலை இரண்டும் சிவமலை சக்திமலையென்ற பெயரோடு இங்கேயே இருக்கட்டும் பிற்காலத்தில் இந்த மலைகள் முருகனுக்குகந்த தெய்வீக மலையாக விளங்கிவரும். நீயும் இங்கேயே இருந்து முருகனுக்கு பணிவிடைகள் செய்துகொண்டு இந்தமலைகளை பாதுகாத்துக்கொண்டு இரு என்று கூறி இடும்பனுக்கு ஷடாக்ஷர மந்திரத்தை உபதேசித்தருளினார்.

அன்றுமுதல் இடும்பன் முருகபெருமானை உபாஸித்துக்கொண்டு தொண்டனாக பணி செய்துக்கொண்டு இந்த பழனி மலையை பாதுகாத்து வருவதுடன் ஒருநாள் ஸ்ரீ முருகபெருமானிடம் நான் இந்த இரு மலைகளையும் குருநாதர் உத்திரவுப்படி தூக்கிவந்த காரணத்தால் எனக்கு தங்கள் தெரிசனம் கிடைத்தது தங்கள் மந்திரமும் கிடைத்துள்ளது. அதுபோல தங்கள் பூஜை வழிப்பாட்டிற்குள்ள பொருள்களை காவடியாகக் கட்டி எடுத்துவருபவர்களுக்கும் தங்கள் அருள் மிகுதியாக கிடைக்க அருள வேணுமென வேண்டினான். வேண்ட முழுவதும் தருபவனான முருகபெருமான் அப்படியே என ஆசி வழங்கினார். அன்றுமுதல் பக்தர்கள் பால்காவடி பழக்காவடி சக்கரைக்காவடி, சோதனைக்காவடி, மச்சக்காவடி, ஸர்ப்பகாவடி முதலான காவடிகள், ரதகாவடி, அலகுகாவடி என்று பல காவடிகள் மூலம் முருகபக்தர்கள் தங்கள் பக்தியை அன்புடன் பழனி முதலான பலதலங்களில் செலுத்திவருகிறார்கள்.முருகன் வழிபாட்டில் திருவிழாக்களில் இடும்பன் பூஜையுடன்தான் நிறைவுபெறுகிறது. இடும்பனுக்கு முருகன் ஆலயத்திற்கு முன்புறமோ அல்லது பக்கத்திலேயோ ஆலயம் அமைக்கலாம் என்பதை குமாரதந்திரம், சிவாகமம், சிற்பசாஸ்திரம் முதலியன கூறுகின்றன.

## உபாஸநா வழிகாட்டி ஸ்ரீ குருநாதரே.

உலகினில் எல்லா உயிரினங்களும் விரும்பது இன்பமே ஆனால் கிடைப்பதோ, துன்பங்கலந்த இன்பம், அவரவர் செய்து வந்த வினைகளுக்கொப்ப நன்மைகளும் தீமைகளும் பயன் தந்துகொண்டுவரும், தீமைகளை நீக்கி நன்மைகளே கிடைத்திட செய்ய உபாஸநாமார்க்கமே சிறந்த வழியாகும். உபாஸநாமர்க்கமானது பூத்து காய்த்து பழுத்து பலன்தரக்கூடிய சுகவனமாகும் வனம் என்ற சொல் பல்வேறு மரங்களின் சேர்க்கையை குறிக்கும். அதேப்போலத்தான் உபாஸனையும் வனத்தில் சில மரங்களாக பயன்தரும் சிலஇலைகளாக பயன்தரும் சிலகாயாக பயன்தரும், சிலபழங்களாக பயன்தரும் அதுபோலவே சிலமந்திரங்கள் குறைந்த அளவு ஜபம் செய்வதினாலேயே பயன்தரும். சிலமந்திரங்கள் மிகுதியாக ஜபம் செய்வதினால்

பயன்தரும் சிலமந்திரங்கள் ஜபம் ஹோமம் தர்ப்பணம் என்ற புரச்சரண முறையில் செய்வதினால் பயன்தரும். வனத்தில் சில விஷமரம், செடிகொடிகள் இருப்பதுபோல கெடுதல்தரக்கூடிய மந்திரங்களுமுண்டு. வனத்தில் வழிதெரியாதவர்கள் நடந்து உள்ளே செல்வது மிக சிரமத்தைதரும் மந்திரங்களை தானாகவே உபாஸிக்கிறவர்கள் நிலையும் அதுவே, வனத்தில் சஞ்சரிப்பதற்கு வழியும் நிலையும் அறிந்த ஒருவர் துணை எப்படி அவசியமோ அதேப்போல உபாஸனைக்குதகுந்த குருதேவை.

உலகியல் கல்விகளில் படிப்பவனால் ஏற்பட்ட பிழையோ அன்றி ஆசிரியர் சூழலால் செய்த பிழையோ திருத்திக்கொள்ளத்தக்கதே, உபாஸனா கல்வி பிழை அப்படியில்லை உபாஸனா பிழையானது எவ்வளவு இன்னல்களை ஈட்டித்தரும் என்பது முன்அனுபவத்தோருக்கே தெரியும். தகுந்த குரு இல்லாமல் உபாஸன மார்க்கத்தில் ஈடுபடுவது மிகுந்த இடையூறுகளைத்தரும்.

மந்திரநெறியில் குரு மந்திரம் தெய்வம் இவைகளை ஒன்றாக மதிக்கப்பெறும். குருவே மந்திரத்தை உபாஸகனுக்கு உபதேசிக்கிறார். அவர் வாக்கு சரீரம் ஜீவன் எல்லாம் மந்திரமயமாக விளங்குகிறார். தெய்வமோ மந்திர வடிவமாகவே விளங்குகிறது இதனை நீதிசாஸ்திர நூல் தெய்வாதீனம் ஜகத்ஸர்வம்.

மந்திரா தீனந்து தைவதம் எனக்கூறுகிறது. குருமந்திரமாகவும் மந்திரம் தெய்வமாகவும் விளங்குவதால்தான் மந்திரம் குரு தெய்வம் மூன்றும் சமம் என்று சொல்லப்படுகிறது.

தியானத்திற்கு மூலம் குருவடிவம்
பூஜைக்கு மூலம் குருவின் திருவடிகள்
மந்திரத்திற்கு மூலம் குருவின் வாக்கியம்
முக்திக்கு மூலம் குருவருளே.

இதனையே விளக்குவதுதான்
குருபிர்மா குருவிஷ்ணு
குருதேவோ மகேஸ்வர
குருஸாக்ஷாத் பரபிர்மா
தஸ்மைஶ்ரீ குரவே நம:

குரு சீடனுக்கு மனநிம்மதியை உருவாக்குவதாலும் புண்ணிய சேர்க்கையினால் க்ஷேமங்களை ஆக்கி தருவதினால் குருபிர்மமாகவும் சீடனுக்கு ஏற்படும் துன்பங்களையும் பாபங்களிலிருந்தும் காப்பதினால் குருவிஷ்ணுவாகவும் சீடனுக்கு வரும் இன்னல்களையும், இடையூறுகளையும் சத்ருபாதைகளையும் அழிப்பதால் குருமகேசனாகவும் பேரின்ப நிலையான முக்திக்கு காரணமாக இருப்பதால் குரு ஸாக்ஷாத் பரபிரம்மமாகவே விளங்குகிறார்.

குருமூர்த்தியின் அருள்இன்றி திருமூர்த்திகளின் அருள் கிட்டாது என்பது சித்தர்கள் வாக்கு. பரமேஸ்வரனையே தக்ஷிணாமூர்த்தியான குருபகவான் என்று வேத சிவாகமங்கள் கூறுகின்றன. மஹாவிஷ்ணு கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணம் வந்தே ஜகத்குரும் என்றும் பிரும்மா வேத குருவாகவும் கூறும்.

சிவாகமத்தில் ஏழுகுருக்களை பற்றி கூறுகிறது ஸதாசிவ மநந்தஞ்ச ஸ்ரீகண்டம் புனரம்பிகாம் ஸ்கந்தம் விஷ்ணுஞ்ச தாதாரம் குருன்ஸப்த ஸமாச்ரயே 1. ஸதா சிவகுரு, 2. அனந்தகுரு, 3. ஸ்ரீகண்ட குரு, 4. அம்பிகா குரு, 5. ஸ்கந்த குரு, 6. விஷ்ணு குரு, 7. பிர்மா குரு, முருகபெருமான் தேவர்களில் சிவனுக்கும் ரிஷிகளில் அகத்தியருக்கு மனிதர்களில் அருணகிரியாருக்கும் குருவாய் விளங்கிவருகிறார். தேவர்களுக்கு குருவியாழபகவானும் அசுரர்களுக்கு சுக்ராச்சாரி குருவாக விளங்கிவருகிறார்கள்.

மந்திரம் பலவகைப்படும் ஏகாக்ஷரீ ஓரெழுத்து மந்திரம் த்வியாக்ஷரி இரண்டெழுத்து மந்திரம், த்ரயக்ஷரீ மூன்றெழுத்து மந்திரம், சதுரக்ஷரீ நான்கெழுத்து மந்திரம், பஞ்சாக்ஷரீ ஐந்தெழுத்து மந்திரம் ஷடக்ஷரி ஆறெழுத்து மந்திரம் ஸப்தாக்ஷரி ஏழெழுத்து மந்திரம், அஷ்டாக்ஷரி எட்டெழுத்து மந்திரம், நவாக்ஷரீ ஒன்பதெழுத்து மந்திரம், தசாக்ஷரீ பத்தெழுத்து மந்திரம், ஏகாதசாக்ஷரீ பதினொரு எழுத்து மந்திரம், துவாதசாக்ஷரீ பனிரெண்டெழுத்து மந்திரம், பஞ்சதசாக்ஷரீ பதினைந்து எழுத்து மந்திரம், ஷோடசாக்ஷரீ பதினாறு எழுத்து மந்திரமாக கூறும் இருபத்தியெட்டு அக்ஷரங்கள் மந்திரங்கள் மூலமந்திரமாக இருபத்தி நான்கு அக்ஷரங்கள் உள்ளதை காயத்ரி மந்திரமென்றும் கூறப்படுகிறது.

<u>மந்திரங்களை ஜபம் செய்யும் முறை:</u>

உபாம்சு யஜநே ப்ரோக்தம்

வாசிகம் ஹோம கர்மணி

மாநசந்து ஜபேந் மந்திரம்

• மந்திரமேவ முதாஹ்ருதம்

இருபத்தியெட்டு அக்ஷரங்களுக்கு மேல் உள்ள மந்திரம் மாலா மந்திரமெனப்படும். பூஜை செய்யும்போது மந்திரம் வாய் அசையவும் பக்கத்தில் உள்ளவர்களுக்கு மட்டும் கேட்க கூடிய அளவில் ஹோமம் செய்யும் போது மற்றவர்கள் கேட்கும்படியாக இறைந்து கூறலாம்.

ஜபம் செய்யும்போது மனதிற்குள் பிறர் அறியாதவாறு செய்வதுதான் முறையாகும். குருவிற்கு நல்ல சிஷ்யர்களும் சிஷ்யர்களுக்கு நல்ல குருவும் கிடைத்து விட்டால் பெரும் புண்ணியமாகும். அந்த புண்ணியம் தெய்வ அனுக்ரஹத்தால்தான் கிடைக்கசெய்கிறது.

தாரமும் குருவும் தலையெழுத்துபோல என்பது பழமொழியாகும் தாரம் நல்லவளாக கிடைத்தால் இந்த பிறவி சிறப்பாக இருக்கும் குரு நல்லவராக கிடைத்து விட்டால் இந்தபிறவியும் வருகிற பிறவியும் சிறப்பாக இருக்குமென கூறும்.

<u>உபாசனா வழிகாட்டி சம்பூர்ணம்</u>





# காசி - வாரணாசி

## வரலாறு

முக்திதரும் ஏழுதலங்களில் ஒன்றும் நினைத்த மாத்திரத்தில் ஏழுஜென்மங்களில் செய்த பாபங்களைப் போக்கவல்ல துவாதசஜோதிர்லிங்கங்களில் ஒன்றாகிய ஸ்ரீவிஸ்வநாதபெருமான் எழுந்தருளியுள்ள க்ஷேத்திரம் ஸ்ரீகாசி. இதுகர்மங்களை நாசம் செய்வதாலும்

சிவஞானத்தால் பிரகாசம் அடையச்செய்வதாலும் காசி என்றும் வாருணி அஸி என்று இரண்டு நதிகளின் சங்கமத்திற்கு இடையில் இருப்பதால் வாரணாசி எனவும் ஈசனால் எப்பொழுதும் விடப்படாமையால் அவிமுக்தம் என்றும் மண்முதலான பஞ்சபூதங்களும் ஒடுங்கி நிற்குமிடமாதலால் மஹாஸ்மசானம் என்றும் இங்குவாசம் செய்கின்ற அனைவரும் சிவஸாரூப்யம் பெற்று விளங்குவதால் ருத்ரவாசம் எனவும் இங்கு வாசம் செய்பவர்கள் சிவானந்த வாழ்வை பெறுவதால் ஆனந்தவனம் எனவும் பெயர்பெறும் மேலும் சிவநிந்தகனான தக்ஷனுடைய சம்பந்தம் பெற்ற உடலை தாக்ஷாயணி உதறியதால் சக்தி பீடம் எனப்படும்.

தேவலோகத்திலிருந்து பகீரதன் என்ற அரசன் கங்கையை பூலோகத்திற்கு கொண்டுவந்தபடியால் பாகீரதி எனவும் ஜன்னு முனிவரின் ஆச்ரமத்தில் புகுந்து மறுபடியும் வெளிவந்தமையால் ஜான்னவி என்றும் பிரசித்திபெற்றது. கங்கை இது இங்கு வடக்கு நோக்கி ஓடுவதால் உத்தரவாஹினி என்று சிறப்பாக கருதப்படுகிறது.

நகாயத்ரியா ஸமௌ மந்திரோ நகாசிஸய்ய ஸ்ரீபுரீ
நவிச்வேச ஸமம்லிங்கம் ஸத்யம் ஸத்யம் புனப்புன:
கலௌ விச்வேச்வரௌ தேவ : கலௌவாரணாஸி புரீ:
கலௌ பாகீரதிகங்கா கலௌதானம் விசிஷ்யதே:.

காயத்திரிக்கு ஸமமான மந்திரமும், காசிக்கு சமமான தலமும், விச்வேசனுக்கு சமமான லிங்கமும் இல்லை கலியுகத்தில் விச்வேசலிங்கமும் வராணாசி ஸ்தலமும் கங்கா நதியும், தானமும் சிறப்புடையன என்று காசிகாண்டம் கூறுகின்றது.

இத்தலமெய்தியிறக்குனர் யாரும் இளைப்பாற
உத்தரீயங்கொடுமாதுமை வீசிட உமையோர்பால்
வைத்தவரும் பொருள் மேவரு தாரக மறையோதி
முத்தியளித்திடும் இப்பகுதியார் விட முயல்வாரே:

காசியில் இறக்கும் ஜீவராசிகளுக்கு மரணாந்த காலத்தில் பார்வதி தேவி தன் உத்தரீயத்தால் இளைப்பாறும்படி வீசவும் பரமகருணாநிதியான மாதொருபாகன் தாரக மந்திரத்தை உபதேசித்து முக்தியளிக்கிறான். என்று காசிகாண்டம் கூறுகின்றது.

காசியை நினைக்க முக்தி காசியென்றுரைக்க முக்தி
காசியைக் காணமுக்தி காசியில் வசிக்க முக்தி
காசியைச்சூழமுக்தி காசியைக்கேட்க முக்தி
காசியில் வசித்தோர் தம்மை கண்டு தாழ்திடுதல் முக்தி;

காசியை நினைத்தாலும் சொன்னாலும் கண்டாலும் வலம் வந்தாலும் கேட்டாலும் அங்கு வசித்தாலும் வசித்தோரை வணங்கினாலும், முக்தி யென்று காசிரகசியம் கூறுகின்றது.

காசியெனுமொரு தலமிக்க கயிலையினு சிறப்புளது கங்கை தீர்த்தம்
வீசுதிரைக்கொழுந்தோட்டிப் பரகதிக்கு வேரோட்டும் வியந்து
மாசினுடல திறந்தால் மரமேனும் விலங்கேனும் முழ்கின மனிதரேனும்
ஈசனருளுபதேசஞ்செவிப்புலாலிறைவனென விருக்கலாமே

என்று அருணாசலபுராணம் கூறும் இதை காசியாந்து மரணான் முக்தி என்று ஸ்ம்ருதி வாக்யம் சுருக்கமாக கூறுகின்றது.

மேலும் காசியில் மூன்றுலோகத்தில்உள்ள தீர்த்தங்களும் மூர்த்திகளும் அடங்கியிருப்பதால் ஐந்து திரோசவிஸ்தீர்ண முள்ள காசியை பிரதஷணம் செய்து விச்வேசனைத்தரிசனம் செய்தால் மூன்று லோகத்திலுள்ள தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து எல்லா மூர்த்திகளையும் சேவித்த பயனும் உண்டாகும். காசியிலிருந்து செய்ய வேண்டிய யாத்திரைகள் இருப்பத்து நான்கு வகையாக வுள்ளன. அவற்றைசெய்து முடிக்க பத்துமாதங்களாகும். அதை கருத்தில் கொண்டே காசியில் ஒரு கெற்ப்பவாசக்காலம் வசிக்க வேண்டும். என்று கூறுகின்றனர்.

விச்வேசம் மாதவம் ருண்டிம் தண்டபாணிஞ்ச பைரவம்
வந்தே காசிம் குஹாம்கங்காம் பவானீம் மணிகர்ணிகாம்.

திருமால் தன்னுடைய சக்ராயுதத்தால் உண்டாக்கியது சக்ரதீர்த்தம் இங்கு தாண்டவம் சிவபெருமானுடைய குண்டலங்கள் விழுந்ததினாள். அந்த தீர்த்தத்திற்கு மணிகர்ணிகை என்றும் அதுவே ஆதி தீர்த்தமெனவும் முக்கியமான கட்டமாகவும் கருதப்படுகிறது.

பிர்ம்ம தேவர் பத்து அஸ்சுவமேத யாகங்களைச் செய்த இடம் தசாச்வமேத கட்டம் எனப்படும். இந்நகரின் மத்தியில் இருப்பதால் ஸ்நானம் செய்வோர் கூட்டமும் யாத்திரிகள் கூட்டமும் அதிகமாக இருக்கும்.

கேதாரகட்டம் சிங்கத்தின் மீதேறிச்சென்று வேற்று மதத்தினனாகிய பாதுஷாவிடம் தாராளமான சன்மானங்களைப் பெற்றுகருடனையேக் காணமுடியாத இடத்தில் கருடனை தன்னுடைய தபோவலிமையால் வட்டமிடக்காட்டி அவ்விடத்தில் மடத்தை அமைத்த குமரகுருபர சுவாமிகளின் மடத்திற்கு அருகில் உள்ளது.

இவ்விதம் மூர்த்தி, தலம், தீர்த்தம், இவற்றால் பிரசித்தபெற்ற காசியில் பார்க்கத்தக்க பல காட்சிகளும், உள்ளன. வியக்கத்தக்க கைத்தொழில்களும், நடைபெறுகின்றன. புகழ்பெற்றகல்வி நிலையங்களும் உள்ளன. காசியாத்திரை செய்பவர்கள், காசியில் தண்டத்தையும், பிரயாகையில் முண்டத்தையும், கயையில் பிண்டத்தையும், செய்தல் வேண்டும். அதாவது காசியில் நாம் தங்கியிருக்கும் காலத்தில் மலமூந்த்திர விசர்ஜனம் செய்த தோஷத்திற்கு பிராயசித்தமாக புறப்பட்டு கடைசியில் காலபைரவர் தெரிசனம் செய்து அங்கு காசிக்கயிறுகளை வாங்கி பைரவக்கடவுளுக்குக் சாத்தி நாம் கட்டிக்கொள்ளும்போது அங்குள்ள பண்டாக்கள் நம்முதுகில் தட்டுவர். இது நம்முடைய பாவங்கள் தொலைவதற்காக செய்யப்படுவது. தண்டம் ஆகும். பிரயாகை(அலகாபாத்தில்) திருவேணிசங்கமத்தில் ஆண்கள் வபனம்

(முகஷவரம்) செய்து கொள்ளவும், பெண்கள் வேணிதானம் (கூந்தலில் நுனியில் இரண்டு அங்குலம் கத்தரித்து அங்குள்ள பாண்டாக்களிடம் தானமாக கொடுக்க) அவர் கூந்தலுடன் மஞ்சள்பொடி கலந்து மந்திர சுலோகம் சொல்லி கங்கையிட உள்ளே செல்வதைக் காணமுடிகிறது. இதற்கு முண்டம் என்று கூறுவார்கள்.

கயையில் தம் முன்னோர்களுக்கு அக்ஷயவடத்திலும், விஷ்ணுபாதத்திலும், பிண்டம் போடுவார்கள், மனிதனாக பிறந்த யாவரும் இதை செய்யவேண்டும். முடியாதவர்கள் காசிக்கு போகவேண்டும் என்று நினைத்தாலே புண்ணியம் உண்டு என்று முற்கூறிய காசி ரகசிய வாக்கியத்ததை நினைத்து காசி விஸ்வேஸ்வரரை அன்னபூரணி விசாலாக்ஷி என்று கூறிக்கொண்டே இருந்தால் அப்பயன் கிட்டும். ஈசனுடைய நாமங்களைச்கூறிக்கொண்டே இருந்தால் காசியாத்திரையும் கிடைக்குமென்பதில் ஐயமில்லை.

<u>காசி வரலாறு சம்பூர்ணம்</u>

## <u>இறைவனுக்கு உகந்த நிவேதனங்கள்</u>

① **<u>சிவனுக்குறிய பஞ்சமுகத்திற்குரிய நிவேதனங்கள்</u>** பூர்வ காரணாகமம் நைவேத்யபடலம் (254 பக்கம்) க்ருஸரான்னம் ஸத்யவக்தரே வாமவக்தரே குளோதனம் பாயஸம் அகோரவக்ரேது சுத்தான்னம் புருஷாஸ்யகே முத்கான்னம் ஈசுவக்த்ரேது பஞ்சவக்த்ரே நிவேதயேது.

1. ஸத்யோஜாத முகத்திற்கு எள்ளுவெல்லம் கலந்த அன்னம்
2. வாமதேவ முகத்திற்கு சக்கரைப்பொங்கல்
3. அகோரமுகத்திற்கு பாயஸான்னம் (பால் சாதம்)
4. தத்புருஷ முகத்திற்கு சுத்தான்னம் (ஹவிஸ்)
5. ஈசான முகத்திற்கு முத்கான்னம் (பொங்கல்)

(2)**<u>ஸ்ரீ மஹாகணபதிக்குரிய நிவேதனங்கள்,</u>** மோதகம், சக்கரைப்பொங்கல், அப்பம், அவல் பொரி, (அஷ்டத்திரவியங்கள்) 1. மோதகம், 2. அவல், 3. பொரி, 4. கரும்பு துண்டு, 5. கொப்பறை தேங்காய், 6. எள்ளு, 7. வாழைப்பழம், 8. ஸத்துமா இந்த எட்டு திரவியங்களையும் சேர்த்து ஹோமம் நிவேதனம் செய்யவேணும்.

(3)**<u>முருகனுக்கு ஆறுமுகத்திற்குரிய நிவேதனம்</u>**, 1. பொங்கல், 2. துவரம் பருப்பு, 3. சக்கரை பொங்கல், 4. தயிர் சாதம், 5. தினைபாயாஸம், 6. தேன் தினைமாவு

(4)**<u>ஸ்ரீ அம்பாளுக்குரிய நிவேதனங்கள்,</u>** 1. பொங்கல், 2. பால் அன்னம், 3. எலுமிச்சப்பழஅன்னம், 4. தயிர்சாதம், 5. சக்கரை பொங்கல், 6. நெய்கலந்த சுத்தான்னம், 7.வடை, 8. தேன், 9. பாயாஸம்.

(5) **ஸ்ரீ சண்டிகேஸ்வரருக்கு, சிவனுக்கு நிவேதனம்** செய்த பிரசாதம் எல்லாம் அவருக்கு பிரியமானவை.

(6) **ஸ்ரீ நடராஜர்,** சம்பா அன்னம், கல்கண்டு பொங்கல், களி.

(7) **ஸ்ரீ தட்சிணாமூர்த்தி,** எலுமிச்சம் பழம் அன்னம், கடலை சுண்டல்.

(8) **பைரவர்,** உளுந்து போட்ட பால்சாதம், வடை பாயாஸம்.

(9) **துர்கை,** சக்கரைப்பொங்கல், உ. பருப்பு சாதம், தேன் வடை பாயாஸம்.

(10) **மஹாமாரி,** தயிர்சாதம், சக்கரைப்பொங்கல், கஞ்சி துள்ளுமா, பானகம் நீர்மோர்.

(11) **ஸ்ரீ சாஸ்தா, (ஐயனார்)** சக்கரை பொங்கல், தயிர்சாதம், பானகம்.

(12) **மஹாவிஷ்ணு,** பொங்கல், புளிஅன்னம், சக்கரை பொங்கல்.

(13) **மஹாலெட்சுமி,** பால்சாதம், இனிப்பு பக்ஷன வகையறா.

(14) **ஸ்ரீ காளியம்மன்,** சக்கரை பொங்கல், தயிர்சாதம், கஞ்சி.

(15) **நந்திகேஸ்வரர்,** அறுகு காப்பரிசி, வெல்லம் கலந்த சுத்தான்னம்.

(16) **சூரியன்,** கோதுமை பொங்கல், கோதுமை பாயாஸம்.

(17) **சந்திரன்,** பால்சாதம்.

(18) செவ்வாய், துவரம் பருப்பு சாதம்.

(19) புதன், பருப்பு பொங்கல்.

(20) குருபகவான், எலுமிச்ச பழம் அன்னம், கடலை சுண்டல்.

(21) சுக்கிரன், தயிர்சாதம்.

(22) சனிபகவான், எள்ளு சாதம், எள்ளு உருண்டை, எள்ளு பொடி.

(23) கேது, தேங்காய் சாதம்.

(24) அக்னி பகவான், (ஹோமத்தில்) சுத்தான்னம் (ஹவிஸ்)

(25) திருப்பதி வெங்கடாஜலபதி, (புரட்டாசி சனிக்கிழமை) எள்ளு சாதம், புளி சாதம், தயிர் சாதம், லட்டு, பாயாஸம்.

(26) உஷக்காலம், (பள்ளியறை) காய்ச்சிய பசும்பால், ஏலக்காய் கல்கண்டு போட்டது.

(27) காலசந்தி பூஜை, பொங்கல், சுத்தான்னம் (ஹவிஸ்)

(28) உச்சிகாலம், குளித்தளிகை, சுத்தான்னம், பருப்பு பச்சடி துவட்டல், நெய் சாம்பார், ரசம், பாயாஸம், மோர் தீர்த்தம், தயிர்சாதம்.

(29) சாயரட்சை, சுத்தான்னம், ஹவிஸ், வடை அப்பம், புட்டு, தோசை முதலியன.

(30) அர்த்தயாம பூஜை, சம்பா சாதம், பால் சாதம்.

பள்ளியறைபூஜை, காய்ச்சிய பசும்பால், ஏலக்காய் குங்குமப்பூ கல்கண்டு போட்டது.

**நிவேதன மஹிமை சம்பூர்ணம்**

## வேத சிவாகமங்களும், திருமுறைகளும்.

ஆதிதம்பதிகளான ஸ்ரீபார்வதி பரமேஸ்வரன் திருக்கல்யாணம் முடிந்த சமயம் பர்வதராஜன் தன் மகளான பார்வதியிடம் புருஷன் வீட்டிற்கு செல்லும் நீ புருஷன் விருப்பங்களை அறிந்து நடந்தாயானால் இரு குடும்பங்களுக்கும் பெருமை உண்டாகும் என்று கூறி கணவன் வீடான கயிலாயத்திற்கு அனுப்பிவைத்தார். பார்வதிதேவி தன்கணவனான சிவபெருமானிடம் தங்களுக்கு மிகவிருப்பமானதை அறிந்து அதன்படி செய்திட ஆசைபடுகிறேன் என்று கேட்டாள். சிவபெருமான் தாம் விரும்புவது பூசனை என உரைத்தருள அதனை சேக்கிழார் பெரியபுராணத்தில் (எண்ணிலா ஆகமம் இயம்பிய இறைவன் தாம் விரும்பும் உண்மையாவது பூசனையென உரைத்தருள்) என்று கூறுகிறார். இதனை கேட்ட பார்வதி பூஜை பொருட்களுடன் வந்து பரமேசுவரரிடம்.

தேவ தேவஜகன்நாதா ஜகதாநந்தகாரண தவபூஜாப்ரவர்த்தோஹம் அனுக்ஞாம் தேஹிமே ப்ரபோ என்று பிரார்த்திக்க இறைவன் பூஜைக்கு உகந்த இடம் பூலோகமே. பூலோகத்தில் பூஜை செய்தால் அதன்பயனை கயிலாயத்தில் அனுபவிக்கலாம் என்று கூறியுள்ளார். தேவி அப்படியானால் பூலோகத்தில் தங்களை சென்று பூஜிக்க வேண்டும், எப்படி எந்தமுறையில் பூஜிக்க வேண்டும் என்பதை அருள்பாலிக்கவேண்டுகிறேன் என்றாள்.

இறைவன் பூலோகத்தில் (நகயேஷு காஞ்சி) காஞ்சியில் வேதசிவாகம முறையில் பூஜிக்க வேண்டும் என்று கூறி நான்குவேதங்களையும் இருபத்தியெட்டு ஆகமங்களையும் தேவிக்கு உபதேசித்தருளினார். இதனை திருஞானசம்பந்த சுவாமிகள் மதுரை பதிகத்தில் வேதமும் பொருள்களும் அருளி அங்கையர்க்கண்ணி தன்னோடும் அமர்ந்த ஆலவாய் இதுவே என்று பாடியுள்ளார். இதனையே ஸ்காந்தத்தில் உள்ள அகஸ்திய ஸம்ஹிதையில்.

பிரணவாத்யா மஹா மந்திரா அகராதியக்ஷா ராணிச சிவஞானானி திரவ்யாணி காமிகாசி பூஸுரா: ஸ்ரீமத் ஹாலாஸ்ய நாதஸ்ய ஸம்பவத் ஊர்த்துவ வக்தரத: புனஸ்து தேவதேவே தத் புருஷாக்யேன வத்தரத : ஸஹஸ்ரசாகா ஸம்யுக்தம் ஸாமவேதந்து வாமதா: அதர்வம் நவதாபின்னம் ஸத்யோஜா தேநசாப்ரவீது.

வேதத்தை அருளிய இறைவன் ஜனங்களுடைய நலன்களுக்காக நான்காக தம்முடைய கிழக்காகவுள்ள தத்புருஷமுகத்திலிருந்து இருபத்தியொரு சாகைகளையுடைய இருக்கு வேதத்தையும் தமது தெற்காகவுள்ள அகோரமுகத்திலிருந்து நூத்தியொரு சாகைகளையுடைய யஜுர்வேதத்தையும், தமது வடக்காகவுள்ள வாமதேவமுகத்தினின்று ஆயிரம் சாகைகளையுடைய சாம வேதத்தையும், தமது மேற்காகவுள்ள ஸத்யோஜாத முகத்தினின்று ஒன்பது சாகைகளையுடைய அதர்வ வேதத்தையும் தமது மேலேயுள்ள ஈசானமுகத்தினின்று காமிகம் முதலான இருபத்தியெட்டு ஆகமங்களையும் அருளியுள்ளார்.

வேத சிவாகம திருமுறை சம்பூர்ணம்

# சங்காபிஷேகம்.



சங்கு வழிபாட்டிற்கு உகந்தது சிவபெருமான் அபிஷேகத்திற்கு பயன்படும். திருமாலுக்கு ஆபரணமாக விளங்குகிறது. சங்கு மூன்று வகைப்படும். 1. இடம்புரி சங்கு,
2. வலம்புரி சங்கு, 3. பாஞ்ச ஜன்னியம், வலம்புரி சங்கு மிகவிசேஷமானது மிக அரிதானது. பூஜைக்கு உகந்தது சங்கு சுட்டாலும் வெண்மைதரும் என்ற பழம்பாடல் உண்டு. சங்கு ஆழ்கடலில்தான் அதிகம் காணப்படுகிறது முத்து குளிப்பது போன்று சங்கு எடுப்பதும் மிககடுமையான தொழிலாகும்.

இந்தியாவில் தூத்துக்குடிப் பகுதிகளில்தான் சங்குகள் பெருமளவில் எடுக்கப்படுகின்றன. சங்கினை காதருகில் வைத்து கேட்டால் ஓங்கார ஒலியைக் கேட்கலாம். ஆலயங்களில் சங்கு ஒலிப்பதை (கூவினப் பூங்குயில் கூவினக்கோழி குறுகுகள் இயம்பின இயம்பின சங்கம்) என்று திருப்பள்ளியெழுச்சியில் மணிவாசகரும், புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன்கோயிலில் வெள்ளைவிளசங்கின் பேரரவம் கேட்டிலையோ என்று திருப்பாவைச்சொல்ல ஆண்டாள் அருளியதும் ஆலயங்களில் மங்கள ஒலியாக சங்கு ஒலிக்கப்பட்டு வருவதை உணர்த்துகிறது.

சிவபெருமானுக்கு சங்கினால் அபிஷேகம் விசேஷ பலன்களை தரும் என்பதை சிவாகமம் நன்கு தெளிவுபடுத்துகிறது. சங்கிலே மூன்று வகை உள்ளது.



சங்கம் த்ருவிதம் ப்ரோக்தம் புமான்நாரி நபும்ஸ்கம்
மூலஸ்நூலம் பவேந்நாரி அக்ரஸ்தூலம் நபும்ஸகம்
அக்ரமூலஸமஞ்சைவ புமான் சேதி ப்ரகீர்த்திதம்



என்று காரணாகமம் கூறுகிறது.

பத மந்திரத்தைக்கூறி சங்காபிஷேகம் செய்வதால் மிகுந்த பலனைத்தரும் 11-108-1008 என்ற முறையில் சங்காபிஷேகம் செய்யும் முறைகளையும் சங்கத்தில் சேர்க்கும் திரவியங்கள் 96 திரவியங்களையும் சேர்க்கும் முறைகளையும் சிவாகமம் தெளிவாகக் கூறுகிறது.

ஆயிரத்தெட்டு இடம்புரி சங்கினால் செய்யும் அபிஷேகத்தைவிட ஒரு வலம்புரி அபிஷேகம் மிகச் சிறந்ததாகும் சக்தியை வழிபடும் ஸ்ரீவித்யா உபாஸகர்களுக்கு சங்க பூஜை. மிக அவசியமாகவும் விசேஷமாகவும் சாக்ததந்திர நூல்கள் கூறுகின்றன. ஆதிசைவர்களுக்கு சிவதீட்சையில் சங்காபிஷேகம் செய்து ஆசாரியர்களாக ஆக்கும் கிரியைகளை சிவாகமம் கூறுகிறது.

மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத்தாமம் நிறைதாழ்ந்த பந்தர்க்கீழ்
மைத்துனன் மதுசூதுனன் வந்தென்னை
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழிநான் என்பாள் ஆண்டாள்.

**சங்காபிஷேகம் சம்பூர்ணம்**

## சைவ சமய சின்னங்கள்

சிவபெருமானை முழுமுதற்கடவுளாக கொண்டு வழிபடும் சமயமே சைவசமயமாகும். சைவசமயம் மிகவும் பழமைவாய்ந்தது. உலகம் எப்பொழுது தோன்றியதோ அப்பொழுதே சிவவழிபாடு தோன்றியதெனலாம். இதனை சிவாகமம் சிவனேஸ்தாபித சிவா சைவவேநஸ்தாபித சிவ: என்று கூறுகிறது. திருமூலர் திருமந்திரத்தில் என்னை நன்றாக படைத்தனன் தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே: என்பர் சிவபெருமான் தன்னைத் ஸ்தாபித்து பயன் பெற சைவ சமயத்தை ஸ்தாபித்தது என்கிறது சிவாகமம்.

சைவ சமயம் என்பதற்குச் சிவத்தை அடையச்செய்யும் என்பது கருத்தாகும். சிவம் என்பது முழுமுதற் கடவுள். ஆதியும் அந்தமும் இல்லாதவர், உருவமற்றவர். நமது மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதவர். (அப்ராபடய மனசாவாசா) என்பது உபநிஷத் வாக்கியமாகும். ஆனால் அவர் திருவருள் இருந்தால்தான் நாம் அவரை உணரவும் அடையவும், முடியும், அவனருளாலே அவன் தாள் வணங்கி என்கிறது திருவாசகம்.

உமாதேவியார் சிவபெருமானுடைய அருட்சக்தியென்று சொல்லப்படுவர். இவ்வுலகத்தில் நம்மீது அதிக அன்பை சொரிந்து நம்மை காத்து வருபவர். நமது தாய்தான் (பால் நினைந்தூட்டும் தாய்) என்பார் மாணிக்கவாசக சுவாமிகள் தாயன்பிற்கு ஈடுஇணை இல்லை யெனலாம் இப்பிறவிக்கு மட்டும் தாயாக இருந்து நமக்கு அன்பினை தந்து காப்பாற்றுபவர் ஜனக மாதாவான தாயென்றால் ஒவ்வொரு பிறவிக்கும் தோன்றாத்துணையாக இருந்து அருள்பாலித்து ஆனந்தமடையச்செய்பவரே ஜகன் மாதாவாகிய உமாதேவியே.

சிவபெருமான் இந்தஅருட்சக்தியாகிய உமாதேவியின் மூலம் படைத்தல் காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல், என்ற ஐந்தொழில்களையும் புரிகிறார். அருட்சக்தியாகிய உமாதேவியின் மூலம் படைத்தலை பிரம்மன் மூலமாகவும், (ஸ்ருஷ்டிகர்த்தா ப்ரும்ம ரூபா) காத்தலை விஷ்ணுமூலமாகவும் (கோப்திரி கோவிந்த ரூபினி) அழித்தலை ருத்தரன் மூலமாகவும், (ஸ்மஹாரினி ருத்ர ரூபா) மறைத்தலை மஹேஸ்வரன் மூலமாகவும்) (திரோதான கரீஸ்வரி அருளலை சதாசிவன் மூலமாகவும் (ஸதாசிவா அனுக்ரஹதா) செய்து வருகின்றார்.

சிவபெருமான் தம்மை வழிபடும் அடியவர்களுக்கு பேரானந்தமாகிய மோட்சத்தைக் கொடுக்கிறார். எனவே அவரை வழிபடும் மார்க்கத்தை கூறுகின்ற சைவசமயத்தை நாம் கடைபிடித்து பயன்பெறுவோமாக.

சைவசமய கொள்கைகள் பல நீதிகளை தம்முன்கொண்டு நம்வாழ்க்கைக்கு வழிகாட்டுவனவாகவும் உள்ளன. கடவுள் வழிபாடு தருமம் செய்தல் உண்மை பேசுதல் ஜீவகாருண்யம் எல்லோரிடத்திலும் அன்பாக இருத்தல் என்பவற்றை வலியுறுத்துகிறது. அன்பே சிவம் என்கிறது. திருமந்திரம் ஆகவே சைவத்தின் மேற்சமயம் வேறில்லை. என்பதால் சிவனடியே சிந்திக்கும் பேறுப்பெற்று வாழ்வாங்கு வாழ்வோமாக.

<u>சைவ சமய சின்னங்கள் :-</u>

ஒருவன் தம்வாழ்க்கையில் ஏற்படும் இன்னல்களைப் போக்கிட மணி மந்திர ஔஷதம் என்ற மூன்று வழிகளைக் கூறுகின்றது. நமது சமயம், பொதுவாக ஒருவர் தமக்குவரும் இன்னல்களை பணத்தின் மூலமாகவோ அல்லது மந்திரத்தின் மூலமாகவோ அல்லது மருந்துகள் மூலமாகவோ, நிவர்த்தி செய்துக் கொள்ளலாம். என்கிறது. நமது சைவசமயம் மணி என்பது ருத்ராக்ஷமணி என்றும் மந்திரம் என்பது சிவபெருமானின் ஐந்தெழுத்து பஞ்சாசரம் என்றும். ஔஷதம் என்பது விபூதி (திருநீறு) என்று கூறுகிறது.

சைவசமயத்திற்கு உகந்தமணி உருத்ராக்ஷமணி ஆகும் உருத்ராக்ஷம் என்பது உருத்ரனின் கண்மணி எனப்பொருள்படும். திருபுராசுரர்களால் தங்களுக்கு ஏற்பட்டுள்ள துன்பங்களைப்பற்றி தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டபோது சிவபெருமானது மூன்று கண்களிலிருந்து சிந்திய மணியே உருத்ராக்க மணியாகும். ஆன்மாக்களிடம் இறைவன் கொண்டுள்ள கருணையை சதா நினைவூட்டும் சாதனமாக உருத்ராக்கம் விளங்கி வருகிறது. இதனை அணிவது அவரவர் திருவருட் பேற்றிருக்கு அறிகுறியாகும். பத்தினிப்பெண்களுக்கு திருமாங்கல்யம், எங்ஙனம் புனிதமான ஆபரணமாக விளங்கி வருகின்றதோ. அங்ஙனமே சிவனடியார்களுக்கு உருத்ராக்கம் போற்றியணியவேண்டிய புனித சின்னமாக திகழ்கின்றது. உண்மையான சிவனடியார்களை சைவசமய நெறிகளிலிருந்து பிறழாமல் காக்கும் இரட்சையாகவும் இது விளங்குகிறது.

உருத்திராக்க வகைகள் ஒருமுகம் தொடங்கி பதினாறு முகம் வரை கொண்ட மணிகள் உண்டு. உருத்ராக்க மணிக்கு மட்டும் இயற்கையிலேயே துவாரம் உண்டு உருத்ராககங்களிலே மிகவும் உயர்தாக கருதப்படுகிறது. உருத்ராக்கங்களிலே மிகவும் உயர்ந்ததாக கருதப்படுவது. கௌரிசங்கர் என்ற மணியாகும். இது இரண்டு உருத்ராக்கம் இணைந்ததாக இருக்கும்

ஒவ்வொரு மணிக்கும் ஒவ்வொரு அதிதேவதை கூறப்படுகிறது. பொன்னிறம், கருநிறம், கபிலநிறம், ஆகிய நிறங்களில் உருத்திராக்கமணிகள் உள்ளன. ஒரே இனமணிகளான மாலைகளே அணியதக்கன. உருத்திராக்கத்தின் மறுபெயர்கள் கண்டி அக்குமணி, கண்மணி, சிவமணி, தாழ்வடம், போன்றவைகளாகும். உருத்ராக்கம் அணிந்தார் பெறும் பேற்றைதிருஞான சம்பந்தர்சுவாமிகள் கீழ்க்கண்ட பாடல்கள் மூலம் விளக்குகிறார்.

நெக்குளார்வ மிகப்பெருகிந் நினைந்
தக்கு மாலை கொடங்கையில் எண்ணுவார்
தக்க வானவராத் தகுவிப்பது
நக்கன் நாமம் நமச்சிவாயவே.

முறையாக உருத்ராக்கம் அணிந்து இறைவனிடம் அன்பு பூண்டார்க்கு உடல் நலமும், செல்வ வளமும், நெடுவாழ்வும், இன்பவாழ்வும், இப்பிறப்பிலேயே பெருகும். மறு உலகத்தில் ஆண்டவன் அடியினை எய்தி மாறா இன்பம் துய்த்து மகிழ்வர்.

பஹூநாம் ஜன்ம நாமந்தே மஹாதேவ ப்ரசாதத:
ருத்ராக்ஷதாரண ச்ரத்தா ஸ்வபாவேன நவ ஜாயதே
அனேக ஜன்மங்களில் செய்த பாவங்களும்
உருத்ராக்கதாரணத்தினால்நிவிருத்தியாகுமென
பராசர புராணம் கூறுகிறது.

ருத்ராக்ஷ தருசம்பூத வாதோத்புத த்ருணாண்யபி
புண்யலோகம் கமிஷ்யந்தி புனராவ்ருத்தி துர்லபம்.

உருத்ராக்க மரத்தினின்று உண்டாகும் காற்றினால் அதன் கீழே பக்கத்திலே உள்ள புற்களும், புண்ணிய லோகத்தை அடைகின்றன். என்று கருடபுராணம் கூறுகிறது. குருவினிடத்தில் பெற்றுள்ள மிருத்யுதாரகம் என்படும் உருத்ராக்கதை கழுத்திலேனும் கையிலேயினும், தலையிலேயினும் கட்டிக்கொள்ளலாம் என்று பிரஹஜ்ஜாபா லோப நிஷத்தில் கூறப்பட்டுள்ளது.

உருத்ராக்கம் தரிக்காமல் செய்யப்படும் சிவபூஜை எதுவும் பயன் தராத சாம்பலில் செய்யப்படும்.ஹவிஸ்ஹோமத்தைப் போல் ஆகையால் உருத்ராக்கம் தரித்து பூசை செய்ய வேண்டும். என்று காலோத்ராகமம் கூறுகிறது.

இங்ஙனம் வேதபுராணங்கள் மாத்திரமன்றி வாதுளாகமம் சிந்தியாகமங்களும் உருத்ராக்கங்களை தரிக்கும் முறை ஸ்தானங்கள் அவற்றின் தொகைகள் அதிதேவதைகள் பயன்கள் முதலியவைகளை விரிவாகக் கூறியுள்ளன.

கண்டி பூண்டு கபாலங்கைக் கொண்ட...... இலிங்கபுராணக் குறுந்தொகை – திருநாவுகக்கரசர்.

கண்டியிற்பட்ட கழுத்துடையீர் கரிகாலிட்டட......

திருநாவுக்கரசர்.– திருவீழி மிழலை தேவாரம்

**பஞ்சாட்சரம் :-**

எண்ணிலா ஆகமம் இயம்பிய இறைவனிடம் உலகம் உய்வு பெற வேண்டி அருட்சக்தியாக உமாதேவியானவள் தாங்கள் விரும்பும் உண்மையாவது யாது என வேண்ட தாம்விரும்பும் பூசனை என உரைத்தருள அண்ணலார் தமை அர்ச்சனை (பூசனை) செய்யவிரும்பி இறைவனிடம் வழிமுறைகளை அருளுமாறு வேண்டிளாள்.

இறைவன் தனது ஐந்து முகங்களுள் கிழக்காவுள்ள தத்புருஷ முகத்தின்று இருக்கு வேததத்தையும், தெற்காக உள்ள (அகோரமுகத்தின்று யஜுர் வேதத்தையும், வடக்காகவுள்ள வாமதேவமுகத்தினின்று ஸாமவேதத்தையும் மேற்காக வுள்ள ஸத்யோஜாத முகத்தின்று அதர்வண வேதத்தையும், மேலாகவுள்ள ஈசானமுகத்திளின்று இருபத்தியெட்டு சிவாகமங்களையும் தேவிக்கு உபதேசித்தார்.

சிவபெருமான் முதன்முதலிலே நான்கு வேதங்களையும், உபவேதங்களையும், இருபத்தியெட்டு சிவாகமங்களுடன் பல உபாகமங்களையும், தேவிக்கு உபதேசித்து அருளினார்.

ஆகதம்சிவவத்ரேப்ய : கதஞ்ச கிரிஜாமுகே

என்று சிவாகமமும் திருஞானசம்பந்த சுவாமிகள் ஆலவாய் பதிகத்தில் வேதமும் அதற்கு பொருளாக சிவாகமங்களையும் அருளினார். என்பதை கூறுகின்றார். திருநாவுக்கரசர் ஓதிய ஞானமும் ஞானப்பொருளும் ஓலி சிறந்த வேதியர் வேதமும் என்று பாடுவர் .

வேதங்கள் நான்காகயிருந்தாலும்இறைவன் பெருமைகளை கூறும்தோத்திரங்கள் மிகுதியாகவுடையவை. ரிக், யஜுர், சாம, என்ற மூன்று வேதங்களே அதனால் இதிவேதாத்ரயஸ்திரியா என்று உபநிஷத் கூறியுள்ளது.

இந்த மூன்று வேதங்களில் நடுவாகவுள்ள யஜுர்வேதம் நூறுசாகைகளை உடையது. அதன் நடுவாகிய ஐம்பத்தோராவது தைத்திரியசாகை ஏழுகாண்டங்களையுடையது. அதன் நடுவாகவுள்ள நான்காம் காண்டத்தின் நடுவாக வருவது ஸ்ரீருத்ரமாகும் ஸ்ரீருத்ரத்தின் நடுவாகவுள்ளது. நமசிவாய சிவதராயச என்று பஞ்சாக்ஷரம் வருவது போல தேவாரதிருமுறைகளிலும் வருவதைக்காணலாம் திருஞானசம்சந்த சுவாமிகள் வேதம் நான்கினும் மெய்பொருளாவது நாதன்நாமம் நமச்சிவாய என்று கூறுகிறார்.

நமக்கு தேவாரங்களை அருளியவர்கள் மூவர் திருஞானசம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், இந்தமூவர்களில்

நடுவராகவுள்ளவர். திருநாவுக்கரசு சுவாமிகள் அவர் அருளியதிருமுறைகள் 4-5-6 ஆகும். இதில் நடுவாக வுள்ள ஐந்தாந்திருமுறை திருக்குறுந்தொகை நூறுபதிகங்களையுடையது. ஐம்பத்தோராவது பதிகம் திருப்பாவைதுறை பதிகமாகும். அது பதினோறு பாடல்களையுடையது. நடுவில்வுள்ள ஆறாவது பாடல்.

விண்ணினார் பணிந்தேத்த வியப்புறும்
மண்ணினார் மறவாது சிவாயவென்று
எண்ணினார் கிடமா எழில்வானகம் பண்ணினார்வர்
பாவைத்துறை யரே

வேதத்திலும் திருமுறைகளிலேயும் நடுவாகவுள்ளது. பஞ்சாட்சர மந்திரமே.

நமசிவாயச சிவதராயச என்று யஜுர் வேதமும்
ஓம்சிவாயநம: ஓம்சிவலிங்காயநம: என்று தைத்திரி ஆரண்யகமும்.

சிகாரம் சிவரூபந்து வகாரம் சக்தியுச்சதே
யகாரம் ஆத்மரூபஞ்ச நகாரம் கிரந்தி ரூபகம்
மகாரம் மலரூபஞ்ச இத்யர்த்த பஞ்சவர்ணா:
என்று சிவாகமும். கூறியுள்ளது.

நாதன் நாமம் நமச்சிவாயவே என்று திருஞானசம்பந்தரும்
நற்றுணையாவது நமச்சிவாயவே என்று திருநாவுக்கரசரும்
நற்றவாவுனை நான் மறக்கினும் சொல்லு நா நமச்சிவாயவே என்று சுந்தரரும்

நானேயோ தவம் செய்தேன் சிவாயவெனப் பெற்றேன் என்று மணிவாசகரும்.

சிவ சிவ என்கிலர் தீவினையாளர் என்று திருமூலரும் கூறுகிறார்.

பஞ்சாட்சரம் இருவகைப்படும்.

1.ஸமஷ்டி பஞ்சாட்சரம் -ஓம்

2. வ்யஷ்டி பஞ்சாட்சரம் -ஐந்து வகைப்படும்

1. ஸ்தூல பஞ்சாட்சரம் - நமசிவாய

2சூக்ஷம பஞ்சாட்சரம் - சிவயநம

3. காரண பஞ்சாட்சரம் -சிவாய சிவ

4.மஹாகாரண பஞ்சாட்சரம்- சிவ சிவ

5 மஹா மனு - சி

<u>சைவ சமய சின்னங்கள் சம்பூர்ணம்</u>

## 1. இருக்கு வேதம்.

எல்லா உயிரினங்களும் நோயின்றி ஆரோக்கியமாக வாழ வழிசெய்யும் ஆயுர்வேதமான வைத்தியசாஸ்திரத்திற்கு ஆதாரமாகவுடைய இருக்குவேதம். மந்திரமும், தந்திரமும் மருந்துமாகி தீரா நோயெல்லாம் தீர்த்தருளவல்லான் தன்னை திருபுரங்கள் தீயெழதீன் இலைகைக்கொண்ட போரானை புள்ளு இருக்கு வேள்ஊரானை என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுவார். நோய்களை தீர்க்கும் வைத்தியர்களுக்கெல்லாம் நாதனாகவுள்ள வைத்தியநாதசுவாமியை வழிப்பட்டு பேறுபெற்ற பின் ஜடாயு ரிக்வேதம் வேல்முருகபெருமான் மூவரும் வழிபட்டதால் புள்ளிருக்குவேளூர் என்ற ஊர் தற்காலம் வைத்தீஸ்வரன்கோயில் என்ற வழங்கி வருகிறது. இருக்கு வேத மந்திரத்தால் இறைவனை ஸ்தோத்திரம் செய்து வழிபடுவதால் நோய்நீக்கமும் ஆரோக்ய வாழ்வும் கிடைக்கும்.

மாணிக்கவாசகபெருமான் தாம் அருளிய திருவாசகத்தில் உள்ள திருப்பள்ளியெழுச்சி பாடலில் இன்னிசை வீணையர் ஒருபால் இருக்கொடுதோத்திரம் ஒருபால் என்று பாடியுள்ளார். இருக்குவேத மந்திரத்தை பாராயணம் செய்யவைத்து அதை கேட்டோமானால் எந்த நோயும் குணத்தைதரும்.

## 2. யஜுர் வேதம்.

யஜ் என்ற தாது யாகத்தை குறிக்கும் யாகம் செய்வதால் செல்வத்தைபெறலாம் சிவகாமவாக்யம் அக்னிகார்ய மஹத்தனம் என்று கூறுகிறது. யாகம் (வேள்வி)

செய்வதால் வான்முகில் வழாதுபெய்யும். மலிவலம் சுறக்கும் மன்னன் (மந்திரிகள்) கோன்முறை அரசு செய்வார்கள் குறைவிலாது உயிர்கள் வாழ்ந்திடும் என்ற கந்தபுராணம் கூறுகிறது. யஜுர் வேதத்தில் உள்ள சமகம் என்ற மந்திரத்தில் வேள்வி (யக்ஞத்தால்) யினால் நீண்ட ஆயுள் கிடைக்கும் யக்ஞத்தால் நல்ல கண்பார்வை கிடைக்கும் யக்ஞத்தால் நல்லகாது கேட்க செய்யும், யக்ஞத்தால் நல்ல மனது (உள்ளம்) கிடைக்கசெய்யும். யக்ஞத்தால் நல்லவாக்கு பேச்சுவன்மை நல்ல இனிமையான குரல்வளம் கிடைக்கசெய்யும், யக்ஞத்தால் நல்ல ஆத்மா (இருதயம்) கிடைக்க செய்யும் என்று கூறுகிறது. யக்ஞத்திற்கு காரணமான யஜீர் வேதத்தை பாராயனம் செய்துவைத்து அதை அன்புடன் கேட்டோமானால் மிகுந்த செல்வம் கிடைப்பதுடன் நமது சரீரத்தில் உள்ள உறுப்புகளும் நன்றாக செயல்பட்டு நல்ல சுகமாக வாழவழி செய்யும்.

## 3. ஸாம வேதம்.

மூன்றாவதாக அமைந்தது ஸாம வேதம் மனதில் ஏற்படும் துன்பங்களைப்போக்கி இன்பங்களை தருவது சங்கீதமே அந்த சங்கீதத்திற்கு ஆதாரமாகவுடையது ஸாம வேதமாகும். ஸாம வேதத்தால் இறைவனை ஸ்தோத்திரம் செய்து வழிபட்டால் நாம் என்ன பிழை செய்திருந்தாலும் அதனை மன்னித்து அருள்பாலிப்பான்.

உதாரணமாக இலங்காதிபதி இராவணேசுவரன் ஒருசமயம் இலங்கைக்கு எடுத்து செல்வதற்காக கயிலைமலையை பெயர்த்து எடுத்தான் அதனால் மலையில் உள்ள எல்லோரும் நடுநடுங்கினர். உமாதேவியார் இறைவனிடம் வேண்ட சிவபெருமான் தமது பாதத்தின் சிறுவிரலை அழுத்த இராவணன் மலையின் அடியில் சிக்கி அழதுகொண்டிருந்தான், அவ்வழியே சென்று கொண்டிருந்த வாகீசர் என்ற முனிவர் இராவணனை பார்த்து நீ சாமவேதியனல்லவா, அந்த சாமவேதத்தால் இறைவனை ஸ்தோத்திரம் செய்தால் இறைவன் நீ செய்துள்ள குற்றத்தை மன்னித்து அருள்பாலிப்பார் என்று கூறிட இராவணன் சாமகானத்தால் இறைவனைநோக்கி செய்திட, இறைவன் அவன் சாமகானத்தில் மகிழ்ந்து பலவரங்களை தந்து ஆசிவழங்கினார்.

இந்த சமயத்தை உலகத்தவர்கள் அறிய தமக்கு நடைபெறும் உற்சவத்தில் ஒருநாள் இராவணன் சாமகாணம் செய்யும் காட்சியை கயிலாய வாகனத்தில் அமர்ந்து காட்சிதரும் நிகழ்ச்சியை சிவாகமம் எடுத்து கூறியதை பெரிய ஆலயங்களில் காணக்கூடியதாகவுள்ளது. மேலும் சாமகாணத்தில் மகிழ்ந்து இறைவன் இராவணனுக்கு ஈஸ்வரன் பட்டம் தந்ததால் இராவணேஸ்வரர் என்று அழைக்க பெற்றார். இராவணனின் சிவபக்தியையும் சிவனருள் பெற்றதையும் திருஞானசம்பந்தர் அறிந்து தாம்பாடிய எந்த ஊர் தேவாரத்திலும் 7 (அ) 8 பாடலில் இலங்கை இராவணனை குறிப்பட்டு பாடியுள்ளார். நாமும் ஆலயத்திலேயோ (அ) உற்சவகாலத்தில்லேயோ சாமவேத பாராயணம் செய்ப செய்து அதனை கேட்பதால் சிவனருள் நமக்கு எல்லா நலன்களுடன் பல்லாண்டு வாழ்ந்து வர அருள் பாலிக்கும்.

## 4. அதர்வண வேதம்.

நான்காவதாக அமைந்தது அதர்வணவேதம் மனிதனுக்கு ஏற்படும் துன்பங்கள் மூன்று வகைப்படும் 1. ஆத்யாத்மிகம் 2. ஆதிபௌதிகம் 3. ஆதிதைவீகம் ஆத்யாத்மிகம் என்பது சிலருக்கு பிறக்கும்போதே சிலவியாதிகளோடு பிறந்திருப்பார்கள். ஆதிபௌதிகம் சிலருக்கு வெயிலினாலேயே மழையினாலேயோ, பனியினாலேயோ, துன்பம் ஏற்பட செய்யும், ஆதிதைவிகம்சத்ருக்களால் ஏவப்பட்ட துர்தேவதைகளால் ஏற்படும் துன்பங்கள் இவைகளை போக்குவதற்கான மந்திரங்கள் மிகுதியாகவுடையது அதர்வணவேதம் இந்த அதர்வணவேதத்தை பாராயணம் செயவதால் வேறு நாடுகளால் நம்நாட்டிற்கு ஏற்படும் இன்னல்களை போக்குவதோடு, சத்ருக்களால் நமக்கு ஏற்படும் கஷ்டங்களை போக்கும் மந்திரங்கள் மிகுதியாகவுடையது அதர்வணவேதம். அதர்வணவேத மந்திரத்தால் இறைவனை பூஜித்து வழிபட்டால் நாடும், நாமும் எல்லாநலன்களோடு பல்லாண்டு வாழ்ந்து வர இயலும்.

## 5. சிவாகம ஸ்தோத்திரம்.

வேதங்கள் சூக்ஷ்மமாக கூறியதை விரிவாகவும், தெளிவாகவும் கூறுவது சிவாகமங்கள். ஒருநாடு நகரம் எப்படி அமையவேண்டும், ஒரு கிராமம் எப்படி அமையவேண்டும், ஒரு வீடு எப்படி எந்தெந்த இடத்தில் எவைகள் இருக்கவேணுமென்பதை சிவாகமம் தெளிவாக கூறுகிறது. சிவாகமத்தில் உள்ளதுதான் சிற்பசாஸ்திரம். மேலும் ஆலயம் அமைக்கவேண்டிய முறை அதில் விக்ரஹங்கள் அமைய வேண்டிய முறைகள் ஸ்தாபிக்கவேண்டிய (கும்பாபிஷேகம்) முறைகளை பற்றியும், நித்ய முஜை வழிபாடு முறைகளை பற்றியும் விரிவாகவும், தெளிவாகவும் சிவாகமங்கள் கூறுகிறது. மேலும் இறைவனே ஆகமமாக இருக்கிறான் என்பதை மாணிக்கவாசகசுவாமிகள் திருவாசகத்தில் உள்ள சிவபுராணத்தில் ஆகமமாகி நின்ற அண்ணிப்பான் தாள் வாழ்க என்று குறிப்பிடுவார். மேலும் ஆகம முறையில் செய்யும் பூஜையைத்தான் இறைவன் விரும்புகிறார். பெரியபுராணத்தில் எண்ணிலா ஆகமம் இயம்பிய இறைவன் தாம் விரும்பும் உண்மையானது பூசனையென உரைத்தருள என்று சேக்கிழார் குறிப்பிடுவார். நாமும் இறைவனை ஆகமமுறைப்படி பூஜை வழிபாடு செய்து இறைவன் திருவருள் பெற்று எல்லா நலன்களுடன் பல்லாண்டு வாழ்ந்து வருவோமாக.

# திராவிட வேதம்.

இதுவரை கூறிய வேத சிவாகமங்களெல்லாம் வடமொழியாகிய ஸம்ஸ்கிருதத்தில் அமைந்தவை, மொழி புரிந்துகொள்ள தாய் மொழியாகிய தமிழில் ஸ்தோத்ர மந்திரங்கள் கிடைக்கவேண்டியவர்களுக்காக வேத ஸாரமான தேவாரத்தை மூன்று ஆசார்ய மூர்த்திகளாலும், ஆகமஸாரமான திருவாசகத்தை ஒரு ஆசார்ய மூர்த்திகளாலும், மந்திரஸாரமான நாலு திருமுறை இருபத்திமூணு ஆசார்யமூர்த்திகளாலும் அருளிசெய்யப்பட்டுள்ளது. அதாவது பனிரெண்டு திருமுறைகளையும் இருபத்தியேழு ஆசார்யமூர்த்திகளாலும் தமிழில் அருளிசெய்யப்பட்டுள்ளது. பன்னிரெண்டு திருமுறைகளையும் சைவத்தில் திக்ஷை பெற்றவர்களுக்குமந்திரம் 12 மூலமந்திரங்களான பஞ்சாஷரம், ஸம்ஹிதா, மந்திரங்கள் 12 இரண்டு மந்திரங்களும் திருமுறைகளிலும் தத்துவமானது. கந்தபுராணத்தில் முருகப்பெருமான் பிரமனிடம் பிரணவத்திற்கு பொருள் கேட்க, தெரியாது தடுமாற குட்டி சிறையிலிட்டார் என்று உபன்யாசகர்கள் கூறுவதை எல்லோரும் கேட்டிருக்கோம். பிறகு சிவபெருமான் பிரமனை சிறையிலிருந்து மீட்டுவிட்டு, சிவபெருமான் முருகபெருமானிடம் பிரணவத்திற்கு பொருள் உனக்கு தெரியுமா என்று கேட்க பிரணவத்திற்கு பொருளை சுவாமிமலை குருநாதராக இருந்து உபதேசித்துள்ளார். பிரணவத்தின் பொருள்தான் பன்னிறு திருமுறை என்றும் முதல் திருமுறையின் முதல்பாடல் தோடுடைய செவியன் என்று ஆரம்பிக்கும் த-ஒ-தோ. பன்னிரெண்டாம் திருமுறையில் கடைசிபாடலில் கடைசி எழும் உலகெலாம் என்ற எழுத்தில் முடியும் பிரணவமாகிய ஓங்காரத்தில் பனிரெண்டு திருமுறையும் அடங்கியிருப்பதை அறியக்கூடிய தாகவுள்ளது. பனிரெண்டு திருமுறைகளையும் மனிதன் வாழ்நாளில் ஒரு முறையாவது பாராயணம் செய்தாலோ அல்லது பாராயணம் செய்யவைத்து கேட்டாலோ நாலு வேதங்கள் இருபத்தியெட்டு ஆகமங்கள் மந்திரசாஸ்திரங்கள் இவைகளை படித்ததின் பயனைபெறலாம். பன்னிரெண்டு திருமுறையாவன 1-2-3. திருமுறைகள் திருஞானசம்பந்தர் அருளியது. 4-5-6. திருமுறைகள் திருநாவுக்கரசர் அருளியது. 7-ந் திருமுறைவரை தேவாரங்கள் சுந்திர அருளியது. 8-ந்திருமுறை திருவாசகம்

திருக்கோவையில் மாணிக்கவாசகர் அருளியது. 9-ந் திருமுறை திருவிசைப்பா திருப்பல்லாண்டு ஒன்பது ஆசிரியர்கள் அருளியது. 10-ந் திருமுறை திருமந்திரம் திருமூலர் அருளியது. 11-ந் திருமுறை பனிரெண்டு ஆசிரியர்களால் அருளியது. 12-ந் திருமுறை திருத்தொண்டர் (பெரிய) புராணம் சேக்கிழார் அருளியது.

பனிரெண்டு திருமுறைகளின் சுருக்கம் பஞ்சபுராணம். அதாவது 1. தேவாரம், 2. திருவாசகம், 3. திருவிசைப்பா, 4. திருப்பல்லாண்டு, 5. பெரியபுராணம் என்று சிவாலய பூஜை வழிபாட்டில் ஓதுவது முறையாகவுள்ளது.

<u>ருக்கு, யஜுர், ஸமா, அதர்வண ஆகம திருமுறை சம்பூர்ணம்</u>






## இறைவனும், இசையும்.

இறைவனை இசையால் வழிப்பட்டு வணங்கினால் இறைவனுடைய திருவருள் சீக்ரமாகவும் சுலபமாகவும், மிகுதியாகவும், கிடைக்க செய்யும் என்பதை (இசை விளங்கும் எழில் சூழ்ந்த இயல்பினால் என்று திருஞானசம்பந்தரும் ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய தோழனாய் என்று சுந்தரரும்) அதிகாலை 4-30 மணிமுதல் குருவனந்தல் திருப்பள்ளியெழுச்சி பூபாளராகம் பெளளி மலயமாருதம் பிலஹரி காலை 8-00 மணிமுதல் காலசந்தி பூஜையில் கேதாரராகம் தன்யாசி தேவகாந்தாரி ஆரபி நாட்டைக் குறிஞ்சி காபிகெளளை ஸாவேரி ஹம்சநாதம் அஸாவேரி சுத்ததன்யாசி சுருட்டி. பகல் 11-00 மணிமுதல் உச்சிகால பூஜை தர்பார் ராகம் மணிரங்கு ஸ்ரீராகம் வராளி மத்யமாவதி ஆபோகி. மாலை 4-30 மணிமுதல் பிரதோஷ கால சாயரக்ஷை பந்து வராளிராகம் பூரி கல்யாணி வசந்தா கல்யாணி சங்கரா பரணம், ஹம்ஸாநந்தி, தோடி, கீர்வாணி, சரஸ்வதிமனோகரி, அடானா, யதுகுலகாம்போதி, பைரவி, ஷண்முகபிரியா, சிம்மேந்திர மத்தியமம், நடபைரவி, அரிகாம்போதி கரஹரபிரியா, ஸௌராஷ்டிரம், பஹுதாரி மோகனம், சாரங்காகெளரி மனோகரி, செஞ்சுருட்டி, நாதநாமக்ரியா,

புன்னாகவராளி, பிருந்தாவனசாரங்க யமுனா கல்யாணி. இரவு 8-00 மணிமுதல் அர்த்தஜாமபூஜை, ஆனந்த பைரவி, சிந்து பைரவி, கானடா ஆஹிரி பாகேஸ்ரீ சஹானா சாருமதி நாககாந்தாரி தர்பாரி கானடா ரஞ்சனி பீம்ப்ளாஸ்மான்ட், சிவரஞ்சனி கன்னட ரதிபதிப்ரியா, நீலாம்பரி,

கணபதிக்குபிரியமான ராகங்கள் தாளம் ஹம்ஸத்வனி நாட்டை கௌளை கணபதிதாளம். முருகனுக்கு பிரியமான இராகங்கள் ஷண்முகபிரியா கானடா செஞ்சுருட்டி சஷ்டி கவசம்.

**திருப்புகழ் பாடல்கள்:**

1. திருப்பரங்குன்றம் முருகனுக்கு நாட்டைக் குறிஞ்சி
2. திருச்செந்தூர் முருகனுக்கு அடாணா
3. பழனி முருகனுக்கு தன்யாசி ராகம்
4. சுவாமிமலை முருகனுக்கு ஹம்ஸாநந்தி ராகம்
5. திருத்தணிகை முருகனுக்கு சாமா ராகம்
6. பழமுதிர்சோலை முருகனுக்கு கௌரி மனோகரி

**சிவனுக்கு பிரியமான ராகங்கள்:**

காம்போதி, சங்கராபரணம், அரிகாம்போதி, ரேவதி போசம்போ.

அம்பாளுக்கு பிரியமான ராகங்கள்.

கல்யாணி பைரவி வசந்தா ரஞ்சனி அமிர்தவர்ஷிணி கௌரி மனோகரி நாதநாமக்ரியா.

**மஹாவிஷ்னுக்கு பிரியமான ராகங்கள்**

பூபாளம், மோகனம், தர்பாரி கானடா, தோடி பிருந்தாவன சாரங்கா.

**மஹாலக்ஷ்மிக்கு மிகபிடித்தமான ராகம்:**

ஸ்ரீ ராகம் கல்யாணவசந்தம், அடாணா, வசந்தா, பைரவி

**சரஸ்வதிக்கு பிரியமான ராகம்:**

சரஸ்வதி, மனோகரி, கதனகுதூகலம், மாயாமாளவகௌளை,

**துர்காதேவிக்கு மிக பிரியமான ராகம்:**

பேகடா, சிந்து, பைரவி, மகிஷாஸுரமர்த்தினி பாடல்

**மாரியம்மனுக்கு மிக பிரியமானராகம்:**

நீலாம்பரி, சௌராஷ்டிரம், புன்னாகவராளி, அமிருதவர்ஷணி

**சாஸ்தாவிற்கு மிக பிரியமான ராகம்:**

மத்யமாவதி, கரஹரபிரியா, மணிரங்கு,

காளியம்மனுக்கு பிரியமான ராகம்: வராளி, நாதநாமக்ரியா, ஆனந்தபைரவி

| | |
|---|---|
| சண்டிகேஸ்வரர்க்கு: | ஆதிரி, சுருட்டி சிவரஞ்சனி |
| பைரவர்க்கு: | சுபபந்துவராளி, சாருகேசி, தர்பார் |
| சூரியனுக்குரிய ராகம்: | ஸௌராஷ்டிரம் |
| சந்திரனுக்குரிய ராகம்: | அஸாவேரி |
| செவ்வாய்க்குரிய ராகம்: | சுருட்டி |
| புதனுக்குரிய ராகம்: | நாட்டைக்குறிஞ்சி |
| குருவிற்கு (பிரகஸ்பதி உரியராகம்: | அடாணா |
| சுக்கிரனுக்குரிய ராகம்: | வசந்தா |
| சனிபகவானுக்குரிய ராகம்: | யதுகுல காம்போதி |
| ராகுவிற்கு பிரியமானராகம்: | ராமபிரியா |
| கேதுவிற்குரிய ராகம்: | ஷண்முகபிரியா |

<u>இசை மஹிமை சம்பூர்ணம்</u>



## மணிவிழா
## ஷஷ்டியப்த பூர்த்தி
## சாந்தி விழா



அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது கிடைத்ததற்கரிய மானிட பிறவியானது தெய்வத்தன்மை அடைவதற்குரியது. ஐந்தறிவு படைத்தது மிருகம், ஆறுஅறிவு படைத்தவன் மனிதன் அதற்குமேலே தெய்வத்தன்மையாகும். மனித வடிவத்திலே மிருகம், மனிதவடிவத்திலே மனிதன், மனித வடிவத்திலே தெய்வம், ஜோதிடசாஸ்திரம் மனிதனை மூன்று கணங்களாக பிரிக்கிறது. 1.இராக்ஷஸகணம், 2. மனுக்ஷகணம், 3.தேவகணம், என்று கூறுகின்றது. மனிதனுக்கு மூன்று பருவங்கள் 1.பால (இளமை) பருவம்) 2.யௌவன (வாலிப) பருவம் 3;விருத்த (வயோதிக) பருவம் தெய்வப்புலவரான திருவள்ளுவர்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும். என்பார்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்வது என்ன? என்பதற்கு வேதம் ஓம் சாந்தி சாந்தி சாந்தி என்று கூறுகின்றது. மூன்று சாந்திகள் செய்துகொள்ள வேணுமென்று கூறுகின்றது. பாலபருவத்தில் ஓர்ஆண்டு நிறைவில் ஒருசாந்தி அப்தபூர்த்தி சாந்தி, சாந்தி என்பதற்கு பரிகாரம் தடைநீக்குதல் என்பது இதனை ஸ்ரீலலிதாசஹஸ்ரநாமம் பிர்ம்ம க்ரந்தி விபேதின்யை என்றுக்கூறும்.

இதற்குறிய வேதமந்திரம் (யோபிர்ம்மா பிர்மன உஜ்ஜஹாற) என்றுகூறி சாந்தி செய்வதால் பிர்ம்மாவின் அனுகிரஹத்தால் அவனது உள்ளதில் நல்ல பண்பாடு நல்ல கல்வி ஒழுக்கம் முதலியவைகளை உருவாகசெய்யும்.

2) யௌவன பருபவத்தில் செய்வது ருது சாந்தி நல்ல அன்பு அகலாத மனைவியை அடைந்து அவளிடத்தில் நல்ல புத்திரனை வேண்டிச்செய்யப்படுவது கர்ப்பாதானம். நல்லகுழந்தை கிடைப்பதற்கு தடையாக உள்ளது. விஷ்ணுகிரந்தி அந்த தடையை நீக்கசெய்வது உதகசாந்தி, ஜலத்தில் மிக்கசக்தி வாய்ந்த மந்திரங்களை ஜபம் செய்து அபிஷேகம் செய்து இரவில் கர்ப்பாதானம் அதற்குறிய மந்திரம்(விஷ்ணும் யோனிம் கல்பயது) என்று கூறி கணவன் மனைவியின் அடிவயிற்றில் கர்ப்பபைஉள்ள இடத்தில் கையைவைத்து கூறுவதால் நல்லபெயர் புகழுடன் வியாபகமுடைய செல்வமுடைய சத்புத்திரன் கிடைத்திட செய்யும்,

3) விருத்தப்பருவம், மூன்றாவது நிறைவான பருவம் காலசக்கரத்திற்கு அறுபது கால்களை கொண்ட சக்கரம் அதுவே நமக்கு அறுபது வருடங்களாக கணக்கிடப்படுகிறது. அறுபதாவது ஆண்டு மிக இன்னல்களைத்தரக்கூடிய ஆண்டு என்பதால் 59-வது ஆண்டு நிறைவு அறுபதாம்ஆண்டு துவக்கத்தில் உக்ரரதசாந்தி என்று செய்ய ஆகம: சாஸ்திரங்கூ்ர் கூறுகிறது. அறுபதாம் ஆண்டு நிறைவில் செய்யக்கூடிய சாந்தி ஷஷ்டியப்தபூர்த்தி சாந்தி (அறுதாம் ஆண்டு நிறைவு ) மணிவிழா செய்யகூறுகிறது. அறுபதாம்ஆண்டில் ஏற்படக்கூடிய அபமிருத்யு (அகாலமரணம்) குடும்பத்தில் யாருக்கும் ஏற்படுவதை தடுக்கசெய்ய கூறுகிறது. ஜோதிடசாஸ்திரம் இதற்குரிய மந்திரம் பிறவியைதரும் மன்மதனை (காமனை) யும் மரணத்தைதரும் காலனை(யமனை) யும் அழித்தபெருமான் அமிருத மிருத்யுஞ்ஜய பெருமான் அவரை வேண்டிச்செய்யும் பூஜைகளும், ஜப ஹோமங்கள் முதலியன அதற்குறிய ஆகம மந்திரம் மிருத்யுஜ்யாய ருத்ராய......என்றும் வேதம் த்ரியம்பகம் யஜாமஹே என்று கூறும் மந்திரத்தால் பூஜை ஜப ஹோமங்களால் மிருத்யுஞ்ஜய (சிவ) பெருமானால் வேதம் கூறிய சதமானம் பவதி சதாயு: புருஷ என்ற வாக்கியத்தின்படி நீண்டநாள் வாழவேண்டி நிறைவான சாந்தியில் மங்களங்கள் ஏற்படவேண்டி மாங்கல்யதாரணம் செய்யக் கூறியது. இதுவரைச்செய்த மூன்று சாந்திகளும் மனித வாழ்வின் மேம்பாட்டிற்காக செய்ய கூறிற்று இதற்குமேல் தெய்வத்தன்மையானதே மனித பிறவியின் பயனாகும்.

மனிதன் ஒரெட்டில் (8வயது) நல்ல பண்புகளையும்

ஈரட்டில் (16 வயதில்) நல்ல கல்வியில் தேர்ச்சிப்பெற்று நல்ல தொழிலுடன்

மூவெட்டில் (24 வயதில்) நல்ல அன்புள்ள மனைவியை அடைந்து இன்பம் துய்த்து

நாலெட்டில்(32 வயதில்)நல்லபண்பான ஒழக்கம் நிறைந்துள்ள நல்ல மக்களைப்பெற்று

ஐந்தெட்டில்(40 வயதில்) மிகுந்த செல்வத்தை அடைந்து
ஆறெட்டில் (48 வயதில்) உலகத்தைசுற்றி பல அனுபவங்களை பெற்று
ஏழேட்டில் (56 வயதில்) எல்லோராலேயும் புகழ்(கீர்த்தி அடைந்து.
எட்டெட்டில்(64 வயதில்) எல்லோராலேயும் போற்றுதலும் வணக்கத்திற்கும், உரியவராக வாழ்ந்துவரவேண்டும் என்று கூறுகிறது. அப்படி வாழ்வாங்கு வாழ்பவரைத்தான் தெய்வத்தன்மையுடையவராக உலகம் கருதும் என்பார். தெய்வப்புலவர் இப்படி அறுபது அண்டு நிறைவான முறையான வாழ்க்கையை கடைபிடித்து வாழ்பவர்களுக்கு கிடைப்பதுதான் சதாபிஷேகம், அறுபதாம்ஆண்டு நிறைவிற்கு பிறகு உலக குடும்ப பந்த பாசங்களைக்கட்டுபடுத்திடவும் தெய்வசிந்தனையை அதிகரிக்க செய்ய பத்தாண்டில் (ஏழுபதாவது வயதில்) பீமரதசாந்தி செய்யக்கூறுகிறது. தர்மசாஸ்திரம்.

அதன்பயனாக எண்பதாவது வயதிற்கு மேல் (ஆயிரம் பிறை கண்டவராக) ஸஹஸ்ர சந்திர தரிசன சதாபிஷேகம் கிடைத்திடும். அபிஷேகம் என்ற சொல் தெய்வத்திற்கு உரியது நமது பெற்றோர்கள் ஸ்நானம் செய்கிறார்கள். குளிக்கிறார்கள். என்றுதான்கூறுகிறோம். தெய்வத்திற்கு அபிஷேகம் என்றுதான் கூறுகிறோம். தெய்வத்திற்குரிய அபிஷேகம் என்ற சொல்லை பெற்றோருக்கு உரியதாக சொல்லும்போது சதாபிஷேகம் என்று சொல்லப்படுவதைதான் தெய்வபுலவரான திருவள்ளுவர்

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவரே வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும். என்று கூறுகிறார்.

சதமானம் பவதி சதாயு புருஷ: சதேந்திரிப: ஆயுஷ்யே வேந்திரியே ப்ரதிதிஷ்டதி

திங்களணி திருவாலவாய் எம்மண்ணல்
திருவிளையாட்டிவை அன்புசெய்து கேட்போர்
சங்கநிதி பதுமநிதி செல்வமேங்கித்
தகமைதரு மகப்பெறுவர் பகையைவெல்வர்
மங்கள நன்மணம் பெறுவர் பிணிவந்தெய்தார்
வாழ்நாளும் நனி பெறுவர் வானெட்பாதி
புங்கவராய் அங்குள்ள போகமூழ்கிப்
புண்ணியராய் சிவனடிக்கீழ் நண்ணி வாழ்வரே!

என்றும் இன்பம் பெறுகும் இயல்பினால்
ஒன்று காதலித்துள்ளம் ஓங்கிட
மன்றுளாரடியாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்.

<u>மணிவிழா சாந்தி சம்பூர்ணம்</u>



# இறைவனும்தண்ணீரும்



1. இறைவன் தன் பரத்துவ நிலையிலிருந்து கீழேயிறங்கி தன்னை நாடும் பக்தர்களிடம் வருகிறார்.

1. A தண்ணீர் மேலேயிருந்து கீழே வரும்.

2. இறைவனுக்கு ஏழை; பணக்காரன், தாழ்ந்தவன், உயர்ந்தவன், ஆண், பெண், சிறியவர், பெரியவர், என்ற பேதம் கிடையாது.

2. A தண்ணீருக்கு ஏழை, பணக்காரன், தாழ்ந்தவன், உயர்ந்தவன், ஆண், பெண், சிறியவர், பெரியவர், என்ற பேதம் கிடையாது.

3. இறைவனை இத்தகையவன், இந்நிறத்தவன்,என்று அறுதியிட்டுச் சொல்ல முடியாது.

3. A தண்ணீருக்கு நிறம், மணம் கிடையாது.

4. இறைவன்அவரவர்களுடைய பக்தியின்அளவுக்கு அருள் மழை பொழிவது இறைவனது தன்மையாகும்.

4. A தண்ணீர் எடுக்கும் பாத்திரத்தின் அளவிலே நிறைந்தது.

5. இறைவன் தான் எடுத்த அவதாரமாகவே மாறி விடுவார்.

5. A தண்ணீரில் எந்த நிறத்தை கலந்தாலும் அந்த நிறமாகவே மாறிவிடும்.

6. படைத்த இறைவனிடம் நலங்களை வேண்டுவதோடல்லாமல் இறைவனோடு இரண்டற கலந்து ஐக்கியமாகும் பக்தனுக்கும் அருளிடுவார்.

6. A உணவு சமைக்க உதவும் தண்ணீரை உணவாக கொள்வது போல.

7. இறைவன் உலகெங்கும் வியாபித்து உள்ளார்.

7. A தண்ணீரும் உலகெங்கும் வியாபித்துள்ளது.




# திருநீறு (விபூதி)



சிவபெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம் சைவம் எனப்படும் சைவசமய நெறிகளில் இன்றியமையாதது சிவ சின்னங்களில் ஒன்றான திருநீறு அணிவதாகும். திருநீறு விபூதி பஸ்பம், பஸிதம், இரட்சை சாரம், என ஐந்து பெயர்களில் விளங்கிவருகிறது. பரமகருணாமூர்த்தியாகிய சிவபெருமான் ஸகலஜீவராசிகளும் உய்யும் பொருட்டு தன் ஐந்து முகத்திலிருந்தும் ஐந்து கோ (பசு) மாதாக்களை அனுக்ரஹித்து பூலோகத்திற்கு அனுப்பி வைத்தார்.

பிருத்வி (மண்) சம்பந்தமான நிவிருத்திகலாம்சமான ஸத்யோஜாத முகத்தினால் அனுக்ரஹிக்கப்பட்ட கோமாதா கபிலநிறமுடைய **நந்தா** அவளுடைய கோமயத்தினின்று ஐசுவரியத்தைத்தரக்கூடிய **விபூதி** உண்டாயிற்று. ஜலசம்பந்தமான ப்ரதிஷ்டா கலாம்சமானவாமதேவ முகத்தினால் அனுக்ரஹிக்கப்பட்டகோமாதா கருப்பு நிறமுடையபத்ரா அவளுடைய கோமயத்தினின்றுபிரகாசத்தை தரக்கூடிய பஸிதம் உண்டாயிற்று

அக்னிசம்பந்தமான வித்யாகலாம்சமான அகோரமுகத்தினால் அனுக்ரஹிக்கப்பட்ட கோமாதா சிவப்பு நிற **சுரபி** அவளுடைய கோமயத்தினால் ஸகல பாபங்களையும் போக்கும் **பஸ்மம்** உண்டானது. வாயுசம்பந்தமுடைய சாந்திகலாம்சமான தத்புருஷ முகத்தினால் அனுக்ரஹிக்கப்பட்ட கோமாதா வெண்மைநிறமுடைய **சுசீலா** அவளுடைய கோமயத்திலிருந்து ஆபத்துக்களை போக்கும் **க்ஷாரா** உண்டாயிற்று.

ஆகாசசம்பந்தமான சாந்யதீதகலாம்சமான ஈசான முகத்தின் அனுக்ரஹிக்கப்பட்ட கோமாதா சித்திரவர்ணமுடைய **சுமநா** அவளுடைய கோமயத்திலிருந்து பூதப்ரேத பிசாசாதி துஷ்டாக்ரஹத்தினிருந்து காக்கும் **இரட்சை** உண்டாயிற்று.

திருநீறு அணிவது இருவகைப்படும் ஒன்று உத்தூளமாக அணிதல் பரவிப்பூசுவதயே இப்பெயர் கொண்டழைப்பர்.

இரண்டாவது வகை திருநீற்றை நீரில் குழைத்து மூன்று பட்டையாக அணிவது. இது தீட்சை பெற்றவர்கள் மாத்திரமே இவ்வாறு தரிக்க தகுதி யுடையவர் ஆவார்கள். இவ்வாறு தரிக்கும் போது கீழ்வரும் விதிகள் கவனிக்கப்படவேண்டியவனவாகும். விபூதியை கீழே சிந்தாமலும் வடக்கு கிழக்கு திக்கு நோக்கியும், பஞ்சபிரம்மமந்திரத்தை ஓதி உச்சி நெற்றி மார்பு நாபி முழந்தாள்கள் புயங்கள், மணிக்கட்டுகள் விலாபுறங்கள் முதுகு கழுத்து என்ற பதினாறு இடங்களில் தரிக்கவேண்டும்.

திருநீறு தரிக்க வேண்டிய காலங்களாவன சந்தியா, காலங்களில் முப்பொழதும் (காலை உச்சி, மாலை) நித்திரைக்கு முன்னும் பின்னும், பல்துலக்கிய உடனும், நீராடிய உடனும், பூஜைக்கு முன்னும் பின்னும் உணவிற்கு முன்னும், பின்னும் திருநீறு அணிதல் வேண்டும்.

குரு சிவனடியார்கள் திருநீறு தந்தால் அமைதியாகவும் அடக்கத்துடனும் அவர்களை வணங்கி இருகைகளையும் நீட்டி வாங்கி அணியவேண்டும்.

திருநீறுக்குமேல் சந்தனமோ குங்குமமோ, அணிதலாகாது. திருநீற்றுக்கு கீழே புருவ நடுவில் அவற்றைத் தரிக்கலாம்.திருநீறு அணியாத முகம் சூனியமாகக் கருதப்படுகிறது. நீறில்லா நெற்றிப்பாழ் என்பது முதுமொழி. திருநீறு அணிவதன் அவசியத்தையும் பெருமையையும், திருஞான சம்பந்த சுவாமிகள் திருநீற்றுப்பதிகத்தில் விரிவாகக் கூறியுள்ளார்.

<u>விபூதி மஹிமை சம்பூர்ணம்</u>







**திருச்சிற்றம்பலம்.**

தொகுப்பு ஆசிரியர்:-

சிவாகம ஞானசாகரம்,சாக்த ரத்னம்,

சிவஸ்ரீ கயிலை மாமணி திருக்கோலக்கா

**N.இராமநாத சிவாச்சாரியார்,**


பதிப்பித்து வெளியிடுபவர் :

சிவாகம சூடாமணி திருக்கோலக்கா

சிவஸ்ரீ **ஞான கார்த்திகேய சிவாச்சாரியார்**

**சிவசக்தி இல்லம்**

32,திருத்தாளமுடையார்கோவில் வடக்குவீதி, சீர்காழி.

செல் :- 98658 85780 - 98430 11264

போன் : 04364 -292175

அச்சு வடிவமைப்பு :-

ஸ்ரீஅபிராமி கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ், சீர்காழி.

செல் : 9442699441



அருள்தரும்

## ஸ்ரீ ஓசைநாயகி அம்பாள்


பதிப்பித்து வெளியிடுபவர் :

சிவாகம சூடாமணி திருக்கோலக்கா

**சிவஸ்ரீ ஞான கார்த்திகேயசிவாச்சாரியார்**

சௌ: K.திரிபுரசுந்தரி

ஸ்ரீ அபிராமி கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ், சீர்காழி.

செல் : 9442699441